'இவர் என் காதலன்; இவர் என் தெய்வம்; இவர் என்னை மணந்து கொள்ளச் சம்மதித்திருக்கும் தயாளன்!' என்றாள் நந்தினி.

"காயம் பட்டிருந்த வீர பாண்டியனைப் பார்த்துக் கொஞ்சம் உண்டாகியிருந்த இரக்கமும் என்னிடமிருந்து அகன்று விட்டது. இந்தப் பாதகன், சண்டாளன்,—எப்படி என்னைப் பழி வாங்கி விட்டான்! என் இராஜ்யத்தையே கைப்பற்றியிருந்தாலும் பாதகம் இல்லை; என் உள்ளத்தில் குடி கொண்டிருந்த பெண்ணரசியை யல்லவா அபகரித்து விட்டான்? இவனிடம் எப்படி இரக்கம் காட்ட முடியும்? முடியவே முடியாது!

"நந்தினியை உதைத்துத் தள்ளி விட்டு அவனைத் தாண்டிக்கொண்டு சென்று வாளின் ஒரே வீச்சில் வீர பாண்டியனுடைய தலையை வெட்டி வீழ்த்தினேன். அந்த கோரமான பயங்கரச் செயலை இப்போது நினைத்துப் பார்த்தால் எனக்கு வெட்கமாயிருக்கிறது. ஆனால் அச்சமயம் யுத்த வெறியோடு கூடக் குரோத வெறியும் என்னைப் பிடித்திருந்தது. அந்த ஆவேசத்தில் வீர பாண்டியனைக் கொன்று விட்டு அந்த வீட்டின் வாசற்படியைத் தாண்டும் போது நந்தினியை ஒரு முறை திரும்பிப் பார்த்தேன். அவளும் என்னைக் கண் கொட்டாமல் பார்த்தாள். அதைப் போன்ற பார்வை இந்தப் பூவுலகில் நான் கண்டதில்லை. அதில் காமக் குரோத லோப மோக மத மாற்சரியம் என்னும் ஆறு வித உணர்ச்சிகளும் அத்தனை நெருப்பு ஜுவாலைகளாகக் கொழுந்து விட்டு எரிந்தன. அதன் பொருள் என்னவென்று எத்தனையோ தடவை எண்ணி எண்ணிப் பார்த்தும் எனக்கு இன்றுவரை தெரியவில்லை!

"அதற்குள் என்னைத் தேடிக் கொண்டு நீயும் இன்னும் பலரும் வந்து விட்டீர்கள். வீர பாண்டியனுடைய தலையற்ற உடலையும் இரத்தம் சிந்திய தலையையும் பார்த்து விட்டு எல்லாரும் ஜய கோஷம் செய்தீர்கள். ஆனால் என்னுடைய நெஞ்சில் விந்திய பர்வதத்தை வைத்ததுபோல் ஒரு பெரும் பாரம் அமுக்கிக் கொண்டிருந்தது!..."




பரோடா மன்னர் யானையை விழுங்கப் பார்த்தார். அதன் பலனாக தம்முடைய பட்டத்தையும் பென்ஷனையும் இழந்தார்.

# மத்திய கேந்திரம்

ஜெயமணி

## ஈரான்—6

பூகோள ரீதியாக ஈரானில் உள்ள விசித்திரத்தைப் பாருங்கள். உலகத்திலே எல்லா நாடுகளிலும் உற்பத்தியாகும் நதிகள் கடைசியாகச் சமுத்திரத்தில் போய்ச் சேருகின்றன. ஆனால் ஈரானில் உற்பத்தியாகும் பெரும்பாலான நதிகளும் மணல் சமுத்திரமாகத் தோன்றும் பாலைவனத்தில் சென்று வறண்டு இருந்த இடம் தெரியாமல் மறைந்து விடுகின்றன! அந்தத் தேசத்தின் ஓரங்கள் அதாவது எல்லைப் பிரதேசங்கள் உயரமாகவும் மத்தியப் பிரதேசங்கள் தாழ்வாகவும் இருப்பதே அதற்குக் காரணம். எனவே ஈரான் மக்களுக்கு உதவியாக அங்கு முக்கியமான பெரிய நதி ஒன்றுமில்லை.

நதிகள் கடலில் சென்று கலக்காமல் உள்நாட்டிலேயே பாலைவன மணலில் உறிஞ்சப்படுவதிலும் ஒரு நன்மை இருக்கத்தான் செய்கிறது! அதாவது பல நாடுகளிலும் ஆறுகள் பூமியின் செழுமைக்கு இன்றியமையாத வண்டல் மணலை அடித்துக் கொண்டு போய்க் கடலில் சேர்த்து விடுகின்றன. ஈரானில் அவ்விதம் இராததால் அங்கு பூமி மிகச் செழுமையாக இருக்கிறது. தண்ணீர் வசதிக்கான முறைகள் கைக் கொள்ளப்படும் பட்சத்தில், ஈரான் விவசாயிகளுக்கு மகத்தான நன்மை ஏற்படலாம் என்று ஆராய்ச்சி நிபுணர்கள் கருதுகிறார்கள்.

தண்ணீர் இராத புதிய நிலத்துக்கு யார் தண்ணீர் கொண்டு வந்து பாய்ச்சுகிறாரோ, அவருக்கே அந்த நிலம் சொந்தமாகிவிடும் என்ற சட்டம் ஈரானில் அமுலில் இருக்கிறது! அதிலிருந்து ஈரான் பூமி தண்ணீருக்காக ஏங்கிக் கிடப்பது தெரிகிறது அல்லவா?

ஈரானில் பல பெரிய ஏரிகள் இருக்கின்றன. ஆனால் அவை உப்புத் தண்ணீராக இருப்பதுடன் கோடை காலத்தில் வற்றிப் போய் விடுகின்றன.

ஈரானின் வட எல்லையில் இருக்கும் காஸ்பியன் கடல் நாற்புறமும் பூமியால் சூழப்பட்டு ஒரு மாபெரும் ஏரியாக இருக்கிறது. எனினும் அது வெகு காலமாகக் காஸ்பியன் கடல் என்றே வழங்கப்பட்டு வருகிறது. உலகத்திலேயே பிரம்மாண்டமான ஏரி அதுதான். அது சுமார் எழுநூற்று ஐம்பது மைல் நீளமும் நூறிலிருந்து இருநூற்றைம்பது மைல் அகலமும் இருக்கிறது. ஈரான்—ருஷ்யா போக்குவரத்துக்கு அது வசதியாக அமைந்திருக்கிறது. ஈரானுக்குத் தெற்கு எல்லையில் இருக்கும் பாரசீக வளைகுடா வெளி நாடுகளுடன் போக்கு வரவு நடத்துவதற்கு மிகவும் வசதியாக இருக்கிறது.

அந்த நாட்டில் மழை அதிகமாகப் பெய்யும் பிரதேசங்கள் இல்லை. எனவே கண்களுக்குக் குளிர்ச்சியாக மரங்களோ, செடிகளோ அதிகமாக இல்லை. எனினும் ஈரானியர்களுக்குப் போதிய தண்ணீர் வசதி கிடைப்பதற்கு வழியிருக்கிறது. மலைப்பிரதேசங்களில் பனி மிகுதியாகப் பெய்வதால் அது உருகி ஓடைகளில் தண்ணீர் பிரவாகமாகப் போகிறது. அந்தத் தண்ணீரைத் தேக்கி வைத்துக் கொண்டால், ஈரான் சுபிட்சமாக இருக்கும் என்று நிபுணர்கள் கூறுகின்றனர்.

பெரும்பாலும் ஈரானைச்சுற்றி மலைகள் இருப்பதால் மேகங்கள் தடுக்கப்பட்டு விடுகின்றன. அங்கு மழை குறைவாக இருப்பதற்கும் உள்நாட்டுப் பிரதேசங்கள் பாலைவனமாக இருப்பதற்கும் அதுதான் காரணம். மலைகள் சுவர்போல் இருப்பதாலும் பாலைவனப் பிரதேசங்கள் அதிகமாக இருப்பதாலும், ரஸ்தாக்களோ ரயில் போக்குவரத்தோ அந்த நாட்டில் அபிவிருத்தி அடையவில்லை.

* * *

ஏற்கெனவே ஆப்கானிஸ்தானத்தைப் பற்றிக் குறிப்பிட்ட போது அது பிரான்ஸ் தேசத்தை விடப் பெரியது என்பதைப் பார்த்தோம். ஆனால் ஈரான் தேசம் ஆப்கானிஸ்தானத்தைக் காட்டிலும் இரண்டரை மடங்கு பெரியது.

ஈரான் ஆறு லட்சத்து இருபத்தெண்ணாயிரம் சதுர மைல் விஸ்தீரணம் உள்ளது. அதன் ஜனத்தொகை சுமார் ஒன்றரைக் கோடிக்குமேல் இருக்கிறது. ஈரான் மக்களில் தொண்ணூறு சத விகிதத்துக்கு மேற்பட்டவர்கள் ஷியா பிரிவைச் சேர்ந்த முஸ்லிம்கள் ஆவர்.

ஈரானில் கிடைக்கும் இயற்கைச் செல்வங்களுக்குள் பெட்ரோலுக்குத் தான் முதல் ஸ்தானம் கொடுக்க வேண்டும். அரசியல் துறையிலும் ஈரான் முக்கிய ஸ்தானம் வகிப்பதற்கு எண்ணெய்தான் காரணம் என்பது முந்திய கட்டுரையில் விவரமாகக் குறிப்பிடப் பட்டிருக்கிறது.

அந்த நாட்டில் இரும்பு, தாமிரம், துத்த நாகம், ஈயம், வெண்காரம், பளிங்கு, நிலக்கரி முதலிய கரங்கச் செல்வங்கள் கிடைக்கின்றன வென்றாலும், அவை இன்னும் அபிவிருத்தி செய்யப்படவில்லை.

ஈரான் மலைப் பிரதேசங்களில் சிங்கம், புலி, கரடி முதலிய கொடிய மிருகங்களுக்குக் குறைவில்லை. இந்தியாவிலே வீடுகளில் ஆடுமாடுகளை வளர்ப்பது போல, ஈரானியர்கள் தங்களுடைய வீடுகளில் ஒட்டகங்களை வளர்ப்பது அந்த நாட்டு மக்களின் வாழ்க்கையில் ஒரு விசேஷமாகும். ஈரானில் பாலைவனப் பிரதேசம் அதிகமாதலால், போக்கு வரத்துக்கு ஒட்டகங்கள்தான் மிக்க உபயோகமாக இருக்கின்றன. ஈரான் குதிரைகள் உலகப் பிரசித்தி பெற்றவை.

அந்த நாட்டில் காடுகள் அதிகம் இல்லை. எனவே, இருக்கும் மரங்களை வெட்டக் கூடாதென்றும், புதிதாக மரங்களை வைத்துப் பயிரிட வேண்டும் என்றும் இருபத்தைந்து வருஷங்களுக்கு மேலாக ஈரான் சர்க்கார் இடைவிடாமல் தீவிரப் பிரசாரம் செய்து வருகின்றனர்.

ஈரானில் உள்ள நிலங்களும் ஒரு சிலருடைய ஏகபோக உரிமையாக இருந்து வருவதால், அங்கு பெரும்பாலான மக்களும் பரம ஏழைகளாக இருக்கிறார்கள். தேநீரும் ரொட்டியும்தான் அவர்களுக்கு உணவாக இருந்து வருகின்றன.

அங்கு கோதுமையும் பார்லியும் அதிகமாக விளைகின்றன. அவற்றிற்கு அடுத்தபடியாக அரிசி, சோளம், புகையிலை, பேரீச்சை, கரும்பு முதலியவை விளைகின்றன. பேரீச்சம் பழங்கள் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

ரத்ன கம்பளங்கள் செய்வதில் ஈரானியர்கள் பல நூற்றாண்டுகளாகப் பிரக்யாதி பெற்று விளங்குகின்றனர்.

ஈரான் பல சாதனங்களுக்கும் வெளிநாடுகளையே எதிர்பார்க்க வேண்டியிருக்கிறது. எனினும் அந்த நாடு ஏராளமாகப் பெட்ரோல் ஏற்றுமதி செய்வது, வெளி நாடுகளிலிருந்து இறக்குமதியாகும் சாமான்களுக்கு ஈடு செய்து விடுகிறது.

அந்த நாட்டிலே 1943-ம் வருஷம் கட்டாய ஆரம்பக் கல்விச் சட்டம் நிறைவேறியது. வெளி நாட்டுக் கல்வி நிபுணர்களைக் கொண்டு தெஹ்ரான் சர்வகலாசாலை சிறப்பாக நடந்து வருகிறது. அங்கு இன்னும் சில சர்வகலாசாலைகளும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன.

ஈரான் நகரங்களுக்குள் பெரியதும் தலை நகருமான தெஹ்ரானில் ஐந்தரை லட்சம் ஜனங்களுக்குமேல் வசிக்கிறார்கள்.



உலகப் பிரசித்தி பெற்ற பாரசீகக் கவி உமார் கையாம்.

பழைய தலை நகரான இஸ்பஹானில் இரண்டு லட்சம் ஜனங்களுக்கு மேல் இருக்கிறார்கள்.

* * *

ஈரான் நாட்டைக் கடந்து செல்லுமுன் இலக்கியத் துறையில் அதன் தனிச் சிறப்பைப் பற்றிக் குறிப்பிட வேண்டியது அவசியமாகும். பாரசீக பாஷையை, பாரசீகம் மானிட வர்க்கத்துக்கு அளித்த விலை மதிக்க முடியாத ஒரு வெகுமதி என்று கூறுகிறார்கள். அதனால்தான் அந்த அற்புதமான பாஷை மத்திய ஆசியாவைச் சேர்ந்த பல நாடுகளிலும் பல நூற்றாண்டுகள் வரையில் அரசாங்க பாஷையாக இருந்து வந்தது.

இந்தியாவில் மொகலாய சக்கரவர்த்திகளின் ஆட்சி நடந்து வந்த காலத்திலும் பாரசீக பாஷையே சர்க்கார் பாஷையாக இருந்தது. பாபர், ஹுமாயூன், அக்பர் முதலிய மொகலாய சக்கரவர்த்திகள் பாரசீக பாஷைப் 'பைத்தியம்' பிடித்தவர்கள் என்று கூறப்படுகிறது.

துருக்கி, எகிப்து, ஈராக் முதலிய மத்திய கேந்திர நாடுகளில் மாத்திரமல்ல, இந்தியா, இங்கிலாந்து, ஜெர்மனி, அமெரிக்கா முதலிய தேசங்களிலும் பாரசீக பாஷைப் பத்திரிகைகள் பிரபலமாக இருந்தனவென்றால், அந்தப் பாஷையின் சிறப்பையும் கீர்த்தியையும் அறிந்து கொள்ளலாம். பல பாரசீகக் கவிகளையும் எழுத்தாளர்களையும் கொடுத்த பெருமை பாரத நாட்டுக்கும் உண்டு!

# அக்கப் போர்

"அரிசி இருக்குமிடம் தெரியவில்லையே!"

— ஒரு சர்க்கார் அதிகாரி.

நெல்லுக்குள் அரிசி இருக்கும் ரகசியம் இந்த அதிகாரிக்குத் தெரியாதது ஆச்சரியம்தான்!

★

"சர்தார் படேலுக்கு ஒரு ஞாபகச் சின்னம் எழுப்ப வேண்டும்."

— காங்கிரஸ் காரியக் கமிட்டி.

சர்தார் படேலுக்கு எவ்வளவு பெரிய ஞாபகச் சின்னம் எழுப்பினாலும், அவருடைய பெருமையை உத்தேசிக்கும்போது அது மிகவும் சின்னச் சின்னமாகத்தான் இருக்கும்.

★

"சமீபத்தில் எடுக்கப்பட்ட ஜன கணிதப் புள்ளி விவரங்களிலிருந்து, சென்னை ராஜ்யத்தில் ஆண்களை விடப் பெண்களே அதிகம் இருப்பதாக வெளியாகி இருக்கிறது."

— ஒரு செய்தி.

இரு தாரத் தடைச் சட்டத்தை நமது அரசாங்கம் இனி ரத்து செய்து விடுமா என்று கேட்கிறார் ஒரு சுப்பிரமண்ய உபாஸகர்!

★

மாங்கொட்டைப் பருப்பை அதிக அளவில் உபயோகப்படுத்துவதுதான் அகில இந்திய மாதர் உணவுக் கழகத்தின் வேலைத் திட்டம் என்று ஒரு செய்தி கூறுகிறது.

மாங்கொட்டையிலிருந்து மந்திரத்தால் மாஞ்செடி வரவழைக்கின்றவர்கள் பாடு இனி ஆபத்துத்தான்!

★

"முன்னேற்றம் அடைந்துள்ள கிராமங்களுக்குக் குறைந்த வரி விதிப்பது பற்றி ஒரு திட்டம் சர்க்கார் ஆலோசனையில் இருந்து வருகிறது."

— ஒரு அதிகாரி.

திட்டம் ஆலோசனை கட்டத்தைக் கடந்து திட்டமாக அமுலுக்கு வருவதில் சர்க்கார் நாட்டம் கொள்வார்களா!

★

"ஸ்ரீ வெங்கடேசப் பெருமாளுக்கு, மைசூர் மகாராஜா தனது பிரார்த்தனையை நிறைவேற்றும் முறையில் அளித்துள்ள ஆண் யானைக்குப் 'பட்டாபிராமன்' என்று பெயர் வைக்கப்பட்டிருக்கிறது."

—திருப்பதிச் செய்தி.

நாட்டில் நிலவும் உணவுப் பஞ்சத்தை மனத்தில் வைத்துக்கொண்டு பட்டாபிராமன் சாப்பாட்டுராமனாக மாறாமல் இருக்க வேண்டும்!

★

"கால் நடை வைத்தியப் படிப்பின் கட்டணத்தை ரூ. 120லிருந்து ரூ. 200 ஆக சர்க்கார் உயர்த்தி இருக்கிறார்கள்."

— செய்தி.

கால் நடை வைத்தியப் படிப்பைப் படிக்கப் போகிற மாணக்கர்கள் காலேஜுக்குக் கால் நடையாகவே போக வேண்டும் என்பதற்காகவா!

★

"ஏழைப்பெண்ணுக்கு லாட்டரியில் இரண்டு லட்சம் ரூபாய் கிடைத்தது." — ஒரு செய்தி.

இரண்டு லட்சம் ரூபாய் கிடைத்த பெண்ணை ஏழை என்று எப்படிச் சொல்லலாம்!

"பீகாரில் பட்டினிச் சாவுகள் ஏற்படலாம்" என்று பீகார் ரெவின்யூ மந்திரி ஸ்ரீ கிருஷ்ண வல்லப சஹாய் கூறினார். —பாட்னாச் செய்தி.

ஸ்ரீ சஹாய் மனது வைத்து மக்களுக்கு வேண்டிய சகாயம் செய்தாரானால் பட்டினிச் சாவுகளைத் தவிர்க்க முடியாதா?

★

"இந்தியாவுக்கு உணவு அளிப்பதைப்பற்றின மசோதா இன்னும் பத்து நாட்களில் வரும்."

—வாஷிங்டன் செய்தி

இந்தியாவுக்கு உணவு இன்னும் எத்தனை நாட்களில் வரும் என்பதுதான் நம் கவலை.

★

"மயானத்துக்குப் பிணத்தைச் சுமந்து வந்தவர் ஒருவர் அங்கே மாரடைப்பால் மரணமடைந்தார்." —கல்கத்தாச் செய்தி.

"செத்தப் பிணத்தை இனிச் சாகும் பிணங்கள்" தூக்குவதைப்பற்றிப் பட்டினத்தாரின் பாடல் இங்கு ஆராய்வதற்குரியது!

★

"சென்னை மாகாண தேங்காய் உற்பத்தி விற்பனையாளர்கள் மகாநாடு ஒன்று நடக்கப் போகிறதாம்." —செய்தி

மகாநாட்டுப் பிரதிநிதிகள் எல்லோருக்கும் குடுமி இருக்கும் என்று உத்தரவாதம் கூற முடியாது.

★

"தாம்பரம் அருகில் விமானம் இறங்கியது."

— செய்தித் தலைப்பு.

இதில் ஆச்சரியம் என்ன! தாம்பரத்துக்கு அருகில்தானே மீனம்பாக்கம் விமான நிலையம் இருக்கிறது!

★

"புகையிலை அபிவிருத்தித் திட்டங்களை உணவு நெருக்கடி தீர்ந்த பிறகுதான் கவனிக்க முடியும்." — ஒரு அதிகாரி.

"உணவு நெருக்கடி தீராத காரணத்தினாலேயே புகையிலையை அபிவிருத்தி செய்ய வேண்டும்" என்கிறார் சாப்பாடு கூட வேண்டாத புகையிலைப் பிரியர்!

★

"10 ரத்தலுக்கு மேல் தந்திக் கம்பிகள் வைத்திருப்பது குற்றம்."

—புது டில்லி அறிக்கை.

வீணை, பிடில் வித்துவான்கள் ஜாக்கிரதை!

★

"பிரதம மந்திரி நேருஜியின்மீது ஒரு வக்கீல் பிராது கொடுத்திருக்கிறாராம்." —ஒரு செய்தி

பிராதின் முடிவில் இரு கட்சியினருக்கும் யாதொரு சேதமும் இராது என நினைக்கிறோம்.

★

"ரேடியோ நிகழ்ச்சிகள் வசீகரமாக இல்லை."

—ஒரு பார்லிமெண்ட் அங்கத்தினர்

ரேடியோ நிகழ்ச்சிகளை வசீகரமானதாக மாற்றி ஒலிபரப்பக்கூடிய புது மாதிரியான ரேடியோ செட்டுகளை விஞ்ஞானிகள் கண்டு பிடித்து விட்டால் போகிறது!



# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 33. இளம் பிள்ளை வாதம்

இந்த வியாதி, இன்றைய உலகத்தில், டாக்டர்களிடையே ஒரு பெரிய பிரச்னை. விஞ்ஞானக் கருவிகள், எக்ஸ்ரேக்கள், மருந்துகள் முதலியன உபயோகிக்கப் படுகின்றன. ஆனால் முடிவு? இதைப் பூரணமாய்க் குணமாக்க முடியவில்லை யென்று அவர்களே ஒப்புக் கொள்கின்றனர்.

இது கொள்ளை நோய் போல் சில சமயங்களில் நகரங்களில் பரவி விடும். வைரஸ் என்ற கிருமியின் தொற்றுதலினால் இந்த வியாதி பரவுகிறது. இந்த வியாதி அநேகமாய் சிறு பிள்ளைகளுக்கே வருவதானாலும், பெரியவர்களுக்கும் வருவதுண்டு. இந்த நோய் கடுமையான ஜுரம், தலைவலியுடன் ஆரம்பமாகும். சிலருக்கு மூக்கிலிருந்து ரத்தம் வரும். குழந்தைகள் இதனால் தாக்கப்பட்டால் ஓரே உறக்கமாகவே படுத்திருப்பார்கள். பெரியவர்கள் அலட்டிக் கொள்வார்கள். கழுத்து விறைத்துக் கொள்ளும். இதை உடனே கவனித்துச் சிகிச்சை செய்ய வேண்டும். இதற்குத் தொற்றும் குணம் உண்டாகையால் இவர்களை மற்றவர்களிடமிருந்து பிரித்துத் தக்க டாக்டர்களிடம் சிகிச்சை பெற வேண்டும்.

ஆனால், இப்படிப்பட்ட நெருக்கடியான சமயத்தில் ஆசனம் துணை புரியாது. இவைகளெல்லாம் வருவதற்கு முன்பே ஆசனங்களைச் செய்து உடலை உறுதியாய் வைத்துக் கொள்ள வேண்டும். அப்படிச் செய்து வந்தால் எந்தவிதமான தொத்து வியாதியும் அணுகாது.

இதற்குத் தடுப்பு முறையாகப் பல சொல்லலாம். ஜனநெருக்கமான இடத்தில் வசிக்கலாகாது. கூட்டம் கூடுமிடங்களில் நாம் போகக் கூடாது. சினிமா, ஹோட்டல் முதலியவைகளுக்குப் போகக் கூடாது என்பதெல்லாம் மிக, மிக உத்தமமான பழக்கங்கள்தான். ஆனால் வாழ்க்கையில் இது சாத்தியமா?

நம்முடைய இரத்தத்தை எடுத்துப் பரிசோதித்தால் எத்தனையோவித நோய்க் கிருமிகள் இருப்பதைக் காணலாம். சதா நாம் அவைகளுடன்தான் வசிக்கிறோம். அவைகளுடன் தான் போராடுகிறோம்.

ஆனால் நாம் நம் உடலை உறுதியாய், ஆரோக்கியமாய் வைத்திருக்கும் வரை எந்தவிதமான நோய்க் கிருமிகளும் அபிவிருத்தியடையாது. தைராய்ட் ரஸம் அந்தக் கிருமிகளைக் கொன்று ஜெயித்து விடும்.

இந்த இளம் பிள்ளை வாத வியாதி குழந்தைகளுக்கு வந்தால் அநேகமாய் இறந்து விடுவார்கள். அப்படித் தப்பித் தவறிப் பிழைத்தாலும் கால் கை சுவாதீனமிருக்காது. குழந்தை தானாக எழுந்து உட்கார முடியாது. பத்து வயதான குழந்தையாயிருந்தாலும் எல்லாக் காரியங்களையும் மற்றவர் செய்தே விட வேண்டும். நிற்க முடியாது. கால்கள் துவளும். கை தூக்க முடியாது. சக்தியிருக்காது. ஏதோ சாப்பிட்டுக் கொண்டு, பலஹீனமான நிலையில் நமக்கும் ஒரு குழந்தையிருக்கிறது என்ற பெயரளவில் வளர்ந்து கொண்டேயிருக்கும்.

இதுவரை இவ் வியாதிக்கு எந்த மருந்தும் கண்டு பிடிக்கவில்லை. ஆனால் இதற்கு யோகாசனம் விமோசனம் அளிக்கிறது.

ஒரு தனவந்தர், ஆறு வயதுள்ள தன் குழந்தையைத் தூக்கிக் கொண்டு வந்தார். பையனுக்குச் செல்வத்திற்கேற்ற களை. தேஜஸ், புத்திசாலித்தன மெல்லாம் இருந்தது. உட்கார வைத்தால் உட்காருவான். படுக்க வைத்தால் படுப்பான். அவனை ஒன்றும் செய்து கொள்ள முடியாது. நிற்க முடியாது. நடக்க முடியாது. கை தூக்க முடியாது. இந்தக் குறையை நிவர்த்திக்க அந்தக் குழந்தைக்குச் செய்யாத சிகிச்சை பாக்கியில்லை. கடைசியில் யோகாசன சிகிச்சை முறையைப் பற்றிக் கேள்விப்பட்டு வந்தார்.

இந்தக் குழந்தைக்குச் சர்வாங்காசனம் சிகிச்சை கொடுக்கப் பட்டது. தினமும் காலை, மாலை பத்து நிமிஷம் இந்த சர்வாங்காசனம் செய்விக்கப் பட்டது. கைகால் சுவாதீனமில்லாததால் அவனால் தானே செய்ய முடியவில்லை. அவன் கால்களைப் பிடித்துத் தூக்கிக்கொண்டு, நம் கால்களைக் கொண்டு அவன் முதுகைத் தாங்கும் படி முட்டுக் கொடுத்துக் கொண்டு செய்

விக்கப்பட்டது. முதல் நாள் இரண்டு நிமிஷ நேரம் சர்வாங்கனப் பயிற்சி கொடுக்கப்பட்டது. பிறகு முறையே இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து என்று பத்து நிமிஷங்கள் வரை பயிற்சி கொடுத்தோம். ஒரு நாளைக்கு இது போல் காலையில் மூன்று தடவை மாலையில் மூன்று தடவை பயிற்சி கொடுத்தோம். ஒவ்வொரு தடவைக்கும் மத்தியில் இரண்டு நிமிஷம் இளைப்பாற விட்டோம்.

இம்மாதிரி காலை மாலை விடாமல் ஆறு மாதங்கள் வரை பெற்றோர்கள் விடாமல் அவனைக் கவனித்து ஆசனம் போடச் செய்து வந்தார்கள். என்ன ஆச்சரியம்! குழந்தைக்குக் கைகளைச் சற்று தூக்க வந்தது. விளையாட்டுச் சாமான்களை அவன் எடுத்துப் பார்த்து வியந்து விளையாட ஆரம்பித்தான். பிறகு சில மாதங்களில் நிற்க வைத்தால் அரை நிமிஷம் ஒரு நிமிஷம் நின்றான். ஆனால், கால் அடி எடுத்து வைக்க முடியவில்லை. தள்ளாடினான். அப்படியே சற்றுக் கையைப் பிடித்து நடக்க வைக்கப்பட்டான். சில நாளில் அவனே ஒவ்வொரு அடியாய் எடுத்து வைக்க ஆரம்பித்தான். பிறகு ஆறு மாதத்தில் அவன் மற்றக் குழந்தைகளைப் போல் நடக்கவும் ஓடவும் விளையாடவும் செய்தான். பெற்றோர்களின் ஆனந்தத்திற்கு அளவேது? வாயார, மனமார வாழ்த்தினர் ஆசனத்தை.

இதில் அவசரமே படக்கூடாது. குழந்தைக்குக் கஷ்டமேற்படாமல் அவன் விரும்பிச் செய்யும் வண்ணம், பலவிதத்தில் சொல்லித் தேற்றி அவனைத் திருப்தி படுத்திச் செய்விக்க வேண்டும். முரண்டு படுத்தும் போதும், அழும்போதும் செய்விக்கக் கூடாது. பயமுறுத்தியும் செய்விக்கக்கூடாது. பலவிதத்தில் சுகமாயிருக்கும் மற்ற குழந்தைகளைக் காட்டி 'இதோ பார்! அவன் எப்படி ஓடி, ஆடி, விளையாடுகிறான். அவனைப் போல நீயும் ஆக வேண்டாமா? நீ நல்ல பையன் ஆயிற்றே. இதைச் செய்தால் நீயும் அம்மாதிரி ஆகி விடுவாய்' என்று அவனை உற்சாகப் படுத்திச் செய்விக்க வேண்டும்.

இதில் என்ன அப்படி மகத்துவ மிருக்கிறது? மந்திரமா? மாயமா? சில சமயம் சில கேஸ்களில் இந்தச் சர்வாங்காசனம் குணப்படுத்துவது எனக்கே, ஆச்சரிய மாக யிருக்கும். வாழ்க சர்வாங்காசனம்!

இளம் பிள்ளை வாதத்தில் நோய்வாய்ப் பட்டபோது, ஜுரத்தின் வேகத்தாலும், வைரஸ் கிருமிகள் தாக்குதலினாலும், தைராய்ட் வளர்ச்சியின்றிச் செயலற்றுப் போய் விடுகிறது. அதிலிருந்து ஹார்மோன் சுரப்பதும் மட்டுப் படுகிறது. சர்வாங்காசனத்தைச் செய்வித்ததனும், தைராய்டிற்குச் சக்தி உண்டாகிறது. பழையபடி ஹார்மோன் சுரக்கிறது. இரத்தம் ஹார்மோனினால் போஷணை யடைகிறது. இரத்த போஷணை, சக்தி யடைவதால் நரம்புகள் வளர்ச்சி யடைகின்றன. நரம்புகள் வளர்ச்சி யடைவதால் துவண்டுபோன கை, கால்கள் பலமடைகின்றன. முறுக்கேறுகின்றன. பிறகு நடக்கவும், ஓடவும், வேலை செய்யவும் முடிகிறது.

ஆசனங்களைப் பழகுவதற்கு முதலில் ஆசனத்தில் நல்ல நம்பிக்கை வைக்க வேண்டும். நம்பிக்கை இல்லாமல் ஆசனம் பழகுவதில் அர்த்தமில்லை. உடம்பில் பல வருஷங்களாக இருந்துவரும் வியாதிகள் ஆசனம் போட ஆரம்பித்த சில தினங்களிலேயோ அல்லது சில வாரங்களிலேயோ போய்விடும் என்று எதிர்பார்த்து உடனே ஆசனத்தின் மீது குறைகூறக் கூடாது. தினம் தினம் காலையிலோ அல்லது மாலையிலோ தவறாமல் ஆசனங்களைப் பழகி வந்தால் கட்டாயம் வியாதிகள் நீங்கும். உடல் ஆரோக்கியமாக இருக்கும். எதையும் பாடுபடாமல் பெற முடியாது. ஆரோக்கியமாக நாம் வாழுவதற்குக் கொஞ்சமாவது சிரமப்பட்டால்தான் முடியும். ஆசனங்கள் போடுவதற்குக் கொஞ்சம் சிரமம் எடுத்துக் கொண்டு பழக்கப்படுத்திக் கொண்டோமானால் பிறகு அது வெகு சுலபமாக இருக்கும். நமது உள்ளத்துக்குத் தெளிவையும் உடலுக்கு ஆரோக்கியத்தையும் கொடுக்கும்.

இந்த ரகஸியத்தை நமது முன்னோர்கள் பல ஆயிரம் வருஷங்களுக்கு முன்பே அறிந்துதான் யோக மார்க்கத்தை அடிப்படையாகக் கொண்டு வாழ்ந்தார்கள். இந்தக் காலத்தில் இதெல்லாம் நம்பிக்கை கொள்வார் கிடையாது. கடவுளிடத்திலும் நம்பிக்கை யிருக்கோ இல்லையோ! ஆனால் மேல்நாட்டு வைத்தியத்தில் அவ்வளவு நம்பிக்கை. வியாதி குணமாகவில்லையென்றாலும் மேலும், மேலும், பெரிய டாக்டர்களிடம் போவார்களே தவிர, சொந்த சாஸ்திரத்தில் நம்பிக்கை கொள்ள மாட்டார்கள்.

ஆனால் இந்த நிலைமை நீடித்து நிற்கப் போவதில்லையென்பது நிச்சயம். சுதந்திரமடைந்த நாம் முனைந்தால் இதற்கு ஒரு மார்க்கத்தைக் கண்டு பிடிப்பது பிரமாதமல்ல. இதற்கென்றே கலாசாலைகள், ஆஸ்பத்திரிகள், யோக சிகிச்சை சாலைகள் முதலியன ஏற்படுத்தலாம். அதற்கென தனிப் பட்டங்கள் கொடுத்தும் ஊக்கம் உண்டாக்கலாம். (தொடரும்)

# அன்பு மலர்க!

ஜடாதரன்

ஸானடோரியத்தின் எல்லை முழுவதிலும் வழக்கத்துக்கு விரோதமாகப் பூரண அமைதி நிலவியிருந்தது. சகஜமாக எதிரொலிக்கும் இருமல் சத்தமும், நோயாளிகளின் மன உற்சாகத்தை அதிகப்படுத்தும் லட்சியத்துடன் அமைக்கப் பட்டிருந்த ரேடியோ அலறலும் கூட நின்றிருந்தது ஆச்சரியமாகவே இருந்தது. ஆனால் 22-ம் நம்பர் 'காட்டேஜு'க்குள் மாத்திரம் அப்போதுதான் புயலின் அறிகுறிகள் தோன்ற ஆரம்பித்திருந்தன!

தியாகராஜன் புழுக்கமாக இருக்கிறதென்று மனைவி விசாலத்தை விசிறச் சொல்லியிருந்தான். கடமையைத் தாற்காலிகமாக மறந்து விட்டாற்போல, இயற்கைகூட ஸ்தம்பித்து நின்றது, காற்றில்லாமல்.

ஊரிலிருந்து விசாலத்தின் தகப்பனார் வந்திருந்தார். இரவுச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு, அவரும் அவர் மனைவி மீனாக்ஷியம்மாளும் காட்டேஜின் ஒரு மூலையில் போடப்பட்டிருந்த பிரம்புக் கட்டிலில் அமர்ந்திருந்தனர்.

சிவராமய்யரின் மனம் நிறைந்திருந்தது. வெகு சீக்கிரத்தில் ஸானடோரியத்திலிருந்து 'டிஸ் சார்ஜ்' ஆகப் போகும் மாப்பிள்ளையை அழைத்துப் போகவே அவர் வந்திருந்தார். தியாகராஜனுடைய படுக்கை அருகில் விசிறிக் கொண்டிருக்கும் தன் பெண்ணைப் பற்றிய சிந்தனையில் அவர் மனம் ஈடுபட்டிருந்தது.

விசாலத்துக்குக் கையை வலித்ததோ என்னவோ? விசிறியைக் கை மாற்றிக்கொள்ள அவள் யத்தனிக்கையில், பக்கத்திலிருந்த சின்ன மேஜையின் மேல் வைக்கப்பட்டிருந்த வெள்ளி டம்ளரில் விசிறி இடித்தது. டம்ளரிலுள்ள ஜலம் முழுவதும் படுக்கையில் கொட்டித் தியாகராஜனை நனைத்தது. தியாகராஜன் சுபாவத்திலேயே கோபக்காரன். ஜலம் மேலே கொட்டியதும் அவன் கோபம் எல்லையைக் கடந்தது.

"சீ! மூதேவி! எங்கே பார்த்துக் கொண்டு விசிறுகிறாய்? கொஞ்சமாவது சிரத்தை இருந்தால்தானே? அவ்வளவு அலட்சியம்!"

விசாலம் பதறிப் போய்விட்டாள். படுக்கையெல்லாம் கொட்டிய ஜலத்தினால் நனைக்கப்பட்டதோடில்லாமல் தியாகராஜனின் வேஷ்டியை வேறு நன்றாக ஈரமாக்கி விட்டிருந்தது.

"வேறே வேஷ்டி தரட்டுமா கட்டிக் கொள்ள?"

"போடி சனியன்! கேள்வியைப் பாரு! இந்த ஈரத்தோடேயே பிராணனை விடுன்னு சொல்லறியோ! உன் அலட்சியத்திற்கு, என்னை இந்தப் பாழும் வியாதிலேயிருந்து மீட்டு வேறே தந்திருக்கே தெய்வம்! என் தலையிலே எழுத்து!"

தன்னைத்தானே அந்தக் கோப நிலையில் நொந்துகொண்டு அவன் தவிப்பதைப் பார்க்க விசாலத்துக்குச் சங்கடமாகவே இருந்தது.

"தெரியாமெ கொட்டி விட்டேன்...... வேணும்னு இப்படிச் செய்வேனா......?"

"ஓஹோ! வேணும்னு வேறே தனியா ஒரு குடம் ஜலத்தைக் கொட்டவேணுமின்னு வருத்தப்படறியோ! இப்பத்தான் கொட்டேன். ஒரேயடியா என்னை ஒழிச்சுக் கட்டி விட்டு ஒங்க அப்பா, அம்மாவோடு ஊரைப் பார்க்க போயிடலாமே......சீ......சீ...... வேறே வேஷ்டியை எடு சீக்கிரம்!"

வேறு வேஷ்டியை எடுக்க அவள் பரபரப்படைந்து கொண்டிருந்தாள். மாப்பிள்ளையின் கோபம் சற்று நியாயமாகவே சிவராம அய்யருக்குத் தோன்றினாலும், பெண்ணும் கை தவறித்தானே அக்காரியத்தைச் செய்தாள் என்று அவருக்குப் பட்டது. ஆயினும் அவரும் விசாலத்தைக் கடிந்து கொள்ளாமலில்லை.

"அதென்ன, அவ்வளவு அஜாக்கிரதை விசாலம்......கொஞ்சம் கூட உனக்கு......"

மாப்பிள்ளை அவர் பேச்சில் குறுக்கிட்டான்.

"அவளுக்கு மனசிலே கொஞ்சமாவது பயம் இருந்தால்தானே! டி. பி. யிலே பிழைத்த புருஷன்தானே என்று அலட்சியம்!"

மீனாக்ஷியம்மாளுக்கு இப்போது ரோஷம் வந்தது. மாப்பிள்ளைக்கு எதிராக ஏதோ முணுமுணுத்தாள். விசாலத்தைப் போலக் கணவனுக்குச் சிசுருஷை செய்ய ஒரு மனைவி கிடைப்பதற்குத் தியாகராஜன் எத்தனையோ ஜன்மங்களில் தவம் கிடந்திருக்க வேண்டுமென்பது அவள் எண்ணம். பெண்

னிடம் அவளுக்கு அவ்வளவு வாஞ்சை. தியாகராஜன் தன் மாமியார், மாமனார் இருவர் பேரிலுமே சீறி விழுந்தான்.

“உங்க பெண்தான் உங்களுக்கு ஒசத்தியாகப்படுவாள். நான் எப்படிப் போனால் என்ன? ஏதோ தண்ட எழவுக்காக......”

சிவராமய்யர் குறுக்கிட்டார்.

“மனசைப் புண்படுத்தும்படியாக ஏன் இப்படி ஏதாவது சொல்லுகிறாய், தியாகராஜன்? உனக்காக வேண்டித்தானே எல்லாம்......”

“நீங்கள் பணம் செலவழித்து விட்டீர்கள் என்ற மமதையிலே, உங்கள் பெண் ஏது செய்தாலும் வாயை மூடிண்டு இருக்கணும்னு சொல்றேளா?”

சிவராமய்யர் மனம் புழுங்கினார். மாப்பிள்ளை தம் பெண்ணைத் தனியாகப் பிரித்துக் கட்டிப் பேசியதை அவர் விரும்பவில்லை. மாப்பிள்ளையின் மனப்போக்கு அவருக்கு விளங்காததொரு புதிராக இருந்தது. அவருக்குங்கூடக் கோபம் வந்தது. ஆனால் பெண்ணைப் பெற்றவரல்லவா? அப்போதிருந்த மன நிலையில் பேச்சு வளர்ந்தால் தன் மரியாதைக்கே பங்கம் ஏற்படும் என்று எண்ணினார் அவர். சற்று நேரம் வெளியே மனைவியுடன் உலாவுவதன் மூலம் அந்தச் சூழ் நிலைக்கு மாற்று ஏற்படுத்த முயன்றார்.

இடையே விசாலம் தன் கணவனுக்காக வேறு வேஷ்டி கொண்டு வந்து கொடுத்தாள். அதை உடுத்திக்கொண்டு, இலேசாக ஒருமுறை இருமிவிட்டு, மறுபடி மனைவியை வைவதில் ஈடுபட்டான் தியாகராஜன்.

“கணவன் பாடு; மனைவி பாடு” என்று சிவராம அய்யரும், மீனாக்ஷியம்மாளும் வெளியே உலாவச் சென்று விட்டனர்.

வெளியே இப்போது காற்று இதமாக அடித்துக் கொண்டிருந்தது. எனினும் உஷ்ணமடைந்திருந்த அய்யரின் மன நிலையைச் சாந்தப் படுத்தக்கூடிய சக்தி அதற்கு இல்லை.

ஸானடோரியத்தின் வெளிப்புறத்தில் அத் தம்பதிகள் மௌனமாக நடந்து கொண்டிருந்தனர். அந்தப் பிரதேசம் முழுவதும் நிலவொளியில் மோகனக் காட்சியளித்துக் கொண்டிருந்தது. பணக்காரர்கள் குடும்பத்துடன் தங்கி, சகல வசதிகளுடன் நோயாளிகளை கவனித்துக் கொள்ளுமாறு அமைக்கப்பட்டிருந்த ‘காட்டேஜ்’ வரிசைகள் சந்திரனொளியில், அழகிய கிராமம்போலத் தோற்றமளித்தன.

சிவராமய்யரின் மனக் கண்ணெதிரே இவ்வழகிய காட்சிகள் மங்கி, சிதைந்து போனதாக அவர் நினைத்த அவருடைய பெண்ணின் இல்லற வாழ்வின் அவலக் காட்சிதான் நிழலாடியது. இரண்டு பர்லாங்கு தூரத்துக்கப்பாலிருந்த ரயில் பாலத்தின் மேல் மனைவி சகிதம் அமர்ந்து, உருக்குலைந்து கிடந்த தமது ஆசைச் சிதைவுகளை எல்லாம் உள்ளத்தில் ஒட்டவைக்கும் முயற்சியில் ஈடுபட்டிருந்தார் சிவராமய்யர்.

* * *

தஞ்சை ஜில்லாவின் மிராசுதார்களில் சிவராமய்யரும் ஒருவர். ‘ஆஸ்திக்கு ஒரு பிள்ளையும், ஆசைக்கு ஒரு பெண்ணும்’ என்று சொல்வதற்கு ஏற்றாற்போல, சுந்தரமும், விசாலமும் அவருக்கு இரண்டு சந்ததிகள். கண்களை இமைகள் காப்பதுபோல, பிள்ளையையும், பெண்ணையும் அவர் அருமையாகப் போற்றி வளர்த்தார்.

விசாலத்துக்குக் கல்யாண வயது வந்ததும் அவர் எடுத்துக்கொண்ட சிரமத்திற்கு அளவேயில்லை. கட்டுக் கட்டாக ஜாதகங்களை வாங்கி வெகு ஜாக்கிரதையாக மாப்பிள்ளையைப் பொறுக்கி எடுத்தார்.

கடைசியில் தியாகராஜன்தான் விசாலத்துக்குக் கணவனாக வாய்த்தான். சகல விதங்களிலும் அவன் விசாலத்துக்கு ஏற்ற கணவனாகவே அமைந்தான். கல்யாணத்தின்போது, அவன் எம். பி. பி. எஸ். லாஸ்ட்க்குப் படித்துக் கொண்டிருந்தான். தன்னுடைய தகப்பனாருக்கு ஒரே பிள்ளை அவன். தகப்பனார் சென்னையில் ஒரு சர்க்கார்





உத்தியோகஸ்தர். நல்ல சொத்தும் செல்வாக்கும் உள்ள மனிதராகவும் இருந்தார்.

புகுந்த இடத்திலும் விசாலத்துக்கு ஒரு குறையும் இருக்கவில்லை. கண் நிறைந்த கணவன்; ஆதரவுடன் கூடிய மாமனாரும் மாமியாரும் இருந்தனர். பணக்காரச் சூழ்நிலையில் அமைந்த சலனமற்ற வாழ்க்கை. புதிதாகப் புக்ககம் வந்தடைந்திருக்கும் ஒரு பெண்ணுக்கு இவைகள் பாக்கிய வசத்தால் உண்டான லட்சிய சாதனங்கள்தானே!

ஆனால் மூன்று வருஷங்களுக்குப் பிறகு விசாலம்—தியாகராஜன் ஆதர்ச வாழ்க்கையில் துன்ப அநுபவங்களின் பயங்கர நிழல்கள் படர்ந்து, மனத்திற்குச் சொல்லொணாத கிலேசத்தை உண்டு பண்ணின. விசாலம் தன் மாமியாரை இழந்தாள். மாமியார் இறந்து போகிற விஷயம் மாத்திரம் ஒரு குடும்பத்தின் சந்தோஷ அநுபவங்களுக்கு முற்றுப் புள்ளி வைக்கக் கூடியதாக இருந்து விட முடியாதே!

தியாகராஜனின் தகப்பனாருக்கு அந்த வயதிலே மறு விவாகத்தில் சபலம் தட்டிய போதுதான் நிலைமை சங்கடமுள்ளதாக மாறியது. ஆனால் அந்த மனிதர் பிடிவாதமாகவே இருந்து, மறு விவாகம் செய்து கொண்டார். தகப்பனாருக்கும், பிள்ளைக்கும் இதனால் பெரிய மனஸ்தாபம் உண்டாகியது. தனக்குள்ள சொத்தின் பாகத்தைப் பிரித்துக்கொண்டு மனைவியுடன் தனிக் குடித்தனம் போக விரும்பினான் தியாகராஜன்.

அவன் நிலைமை அப்போது தர்மசங்கடமாக இருந்தது. படிப்போ பூர்த்தியடையவில்லை. தகப்பனாரின் போக்கோ விபரீதமானதாக இருந்தது. தாய் இறந்த துக்கம் வேறு அவனை வெகுவாகப் பாதித்தது. இவைகளெல்லாம் அவன் மனநிலையையும், தேகநிலையையும் பயங்கரமாகப் பாதித்தன.

அருமைப் பெண்ணிடமிருந்து, ஒரு நாள் சிவராமய்யருக்கு வந்த கடிதம் அவருக்கு 'இடி' விழுந்தது போன்ற உணர்ச்சியை உண்டு பண்ணியது. அந்தக் கடிதம் பேசியது:

"அப்பாவுக்கு அநேக நமஸ்காரம்,

மாப்பிள்ளையைத் தாம்பரம் ஸானடோரியத்தில் க்ஷயரோக சிகிச்சைக்காக அநுமதித்திருக்கிறார்கள். கொஞ்ச நாட்களாகவே அவருக்கு இலேசான ஜுரமும் இருமலும் இருந்து வந்தன. பரீட்சையை முன்னிட்டுக் கொஞ்சம் சிரமப்பட்டு வாசித்ததால், உடம்பு அதிகமாகி க்ஷயரோகத்தில் கொண்டு போய் விட்டிருக்கிறது. சீக்கிரமே குணமாகிவிடும் என்றுதான் சொல்லுகிறார்கள். எனக்குக் கவலையாக இருக்கிறது. உன் பிரியமுள்ள

விசாலம்."

மிகுந்த பரபரப்புடன் மனைவி சகிதமாகச் சென்னைக்கு வந்தார் சிவராமய்யர். மனிதனுக்கு இந்த வியாதிதான் வரலாம், அல்லது வரக் கூடாது என்ற நியதியா இருக்கிறது? ஆனால் கதைகளிலெல்லாம் காணப்படாத அதிசயங்கள் தியாகராஜனின் வாழ்க்கையில் நிகழ்ந்தன.

மகனுடைய இத்தகைய இக்கட்டான நிலையில், தியாகராஜனின் தகப்பனார் தன் கடமையை மறந்ததோடில்லாமல், மறு விவாகம் செய்துகொண்ட மோகத்தில் தன் பிள்ளையின் வைத்தியச் செலவுகளையே ஏற்க மறுத்தார். பிள்ளைக்குக் கல்யாணமானதுமே அவனைப் பற்றிய பொறுப்புகள் யாவும், தம் சம்பந்தியைத்தான் சார்ந்தது என்று எண்ணினார் போலும்!

ஆனால் சிவராமய்யர் தம் சம்பந்தியின் உதாசீனத்தால் மனம் சோர்ந்து விடவில்லை. அவரிடம் பணம் இருந்தது; விசாலத்துக்கு நம்பிக்கை இருந்தது. முக்கண் படைத்த ஆதிசிவனுக்காக மலை முனையில் தவம் புரிந்த உமையவளைப் போல, விசாலமும் கணவன் புத்துயிர் பெற்றெழத் தவமிருந்தாள்.

கணவன்—மனைவி என்ற தொடர்பினின்றும் விடுபட்டு, தாம்பரம் ஸானடோரியத்தி

லேயே பணம் படைத்தவர்களுக்காக அமைக்கப்பட்ட 'காட்டேஜ்' ஒன்றில் தியாகராஜன் சிகிச்சை பெற்று வந்தான். சில சமயங்களும் பெண்ணின் துணைக்காகத் தம் மனைவியையும் அனுப்பிவிட்டு, வெளியிலிருந்தபடியே மாப்பிள்ளையின் தேக ஆரோக்கியம் அபிவிருத்தி யடையும் தினத்தை எதிர்நோக்கியிருந்தார்.

நான்கு வருடங்கள் கழிந்தன. காலத்தின் சுழற்சியினாலும், கடவுள் கருணையாலும் அன்பு மனைவியின் இடைவிடாத சிசுருஷையினாலும் தியாகராஜன் இந்த நான்கு வருடங்களுக்குப் பிறகு பூரணமாகக் குணமடைந்து கொண்டிருந்தான்.

ஐயரின் மனத்திரையில் சுழன்றாடிய இப் பழைய ஞாபகங்கள் அவருடைய மன உணர்ச்சிகளை அதிகப்படுத்தின. நோயிலிருந்து விடுபட்டு, தம் பெண்ணுடன் மாப்பிள்ளை நடத்தப்போகும் புதிய இல்லற வாழ்க்கை எப்படி அமையப் போகிறதோ என்ற ஆவேசம் அவர் மனத்தை வாட்டியது. நேரம் போவதுகூடத் தெரியாமல், சாலைப் பாலத்தில்மேல் தம் மனைவியுடன் இதைப் பற்றியே தர்க்கித்துக் கொண்டிருந்தார்.

தூரத்தில் எங்கோ, 'எலக்டிரிக் ட்ரெயின்' கடகடத்து ஓடிக்கொண்டிருந்தது. நினைவுகளிலிருந்து விடுபட்டு, 'காட்டேஜை' நோக்கித் திரும்ப அவர் தீர்மானித்தார்.

★

தியாகராஜனின் உள்ளமும் நிலை பிறழ்ந்து தவித்துக் கொண்டிருந்தது. தூக்கமே வரவில்லை அவனுக்கு. கொஞ்ச நாட்களாகவே அவன் விசாலத்தினிடம் அடிக்கடி சிடுசிடுத்துக்கொண்டிருந்தான். இதன் காரணம்தான் என்ன? மனத்திலுள்ளே எதிரொலித்துக் கொண்டிருந்த இரு குரல்களில் ஒரு குரல் சொல்லியது:

'விசாலத்தை நீ கோபித்துக் கொள்வது நியாயமா. தண்ணீரை வேண்டுமென்று உன் மேல் அவள் கொட்டினாளா? கை தவறித் தானே? அதற்காக அருமையாக வளர்த்த அவளுடைய தாய் தந்தையர் எதிரே, மனம் நோகும்படி அசப்யமான வார்த்தைகளைச் சொல்லித் திட்டினாயே?'

எதிர்க்குரல் பதில் அளித்தது:

'அவளுக்கு வர வர என்னிடம் அசிரத்தை. அதன் விளைவுதான் இந்த அஜாக்கிரதை. மனைவியைக் கோபித்துக்கொள்ள எனக்குப் பாத்தியதை இல்லையா?'

'பாத்தியதையா...? பாத்தியதை உள்ள உன் தகப்பனாரே உனக்குச் சமயத்தில்



கைகொடுத்து உதவ முன் வரவில்லையே? நேற்று வந்த மனைவியும், அவளைச் சார்ந்தவர்களும் தானே உனக்கு உயிர் ஊட்டினார்கள்? அந்த நன்றிகூட உனக்கில்லையே?”

தியாகராஜன் திணறினான். தீவிரமாகச் சிந்தனை செய்தால், விசாலத்தைப் போன்ற ஒரு லட்சிய மனைவி கிடைப்பதற்கு அவன் கொடுத்து வைத்திருக்க வேண்டும் என்றே தோன்றியது. கணவனுடைய வாழ்வையே லட்சியமாகக் கொண்டு, அவனுடைய அன்பையும், பிரேமையையும் எதிர்பார்த்து நிற்கும் அவளுக்கு அநீதி செய்வதாகவே அவனுக்குத் தோன்றியது. அவளைச் சொல்லியும் குற்றமில்லை. நோயினின்று பூரணமாகக் குணமடைந்திருப்பினும்கூட, அவளை எதிர் நோக்கியிருக்கும் புது வாழ்க்கைக்குரிய நம்பிக்கை அவன் மனத்தில் எழவில்லை. வாழ்வே இருண்டு கிடப்பதாக அவன் நினைத்தான். 'பளிச்'சென்று அவனுக்குக் காலையில் சானடோரியத்தின் தலைமை டாக்டரும் தானும் நிகழ்த்திய சம்பாஷணை அவன் ஞாபகத்திற்கு வந்தது. அவனுடைய சந்தேகமான கேள்விக்குத் தான் அவர் பதில் சொன்னார்:

“தியாகராஜன், நீ கூடவா இப்படி அதைரியப்படுகிறாய்? க்ஷயரோகம் வந்துவிட்டால் வாழ்க்கையே வீணாகி விட்டதா என்ன? வைத்திய முறைகள் அமோகமாக வளர்ச்சியடைந்திருக்கும் இந்த நாகரிக யுகத்தில், ஒரு 'மெடிகல் ஸ்டூடண்ட்' இப்படி மனம் சோர்ந்து போகலாமா? நீ பூரண மனிதனாகவே விளங்குகிறாய். இன்னும் பத்து நாட்களில் உன்னை 'டிஸ்சார்ஜ்' செய்து விடுகிறேன். நம்பிக்கையையும், மனோ பலத்தையும் கொண்டு உன் இல்லற வாழ்வைப் புதுப்பித்துக் கொள்ளலாம்! குழந்தை, குட்டிகளுடன் பெருவாழ்வு வாழ நான் உன்னை ஆசீர்வதிக்கிறேன்.”

தலைமை டாக்டர் அநுபவஸ்தர். அவருடைய இந்த ஆசீர்வாதத்தைக் காலையில் தியாகராஜன் அதிகமாகப் பொருட்படுத்தவே இல்லை. டாக்டர் இதைச் சொல்லிவிட்டுச் சென்ற பின்னரும் கூட, அவன் உற்சாகமில்லாதவனாகவே திகழ்ந்தான். ஆற, அமர யோசித்துப் பார்க்கையில்தான் அவனுக்கு ஞானோதயம் ஏற்பட்டது.

“மாறி மாறி வரும் இரவு பகல்களின் தன்மையினைப்போல, இன்பமும், துன்பமும் கலந்துதானே வாழ்க்கை பூரணத்வம் பெறுகிறது? துன்ப அநுபவங்களிலிருந்து மீண்டு இன்பப் பகுதிக்கு வரும்போது, அதற்கான மனோபலத்தை உண்டாக்கிக் கொள்வதுதானே நியாயம்?” என்று எண்ணமிட்டது அவன் மனம்.

“விசாலம்!......” என்று குரல் கொடுத்தான் தியாகராஜன். சின்னதாக எரிந்து கொண்டிருந்த ஹரிக்கேன் விளக்கைப் பெரிது பண்ணிவிட்டு அவனருகில் வந்தாள் விசாலம். கசங்கிய மலரைப்போல, அவள் முகம் கன்னிப் போயிருந்தது.

“உங்க அப்பாவும், அம்மாவும், இன்னும் வெளியிலே யிருந்து வரவில்லை......? அசடு...எதற்காக இப்படி அழுதிருக்கே...?”

அவன் குரலில் குழைவு கண்டது.

“நான் ஒன்றும் அழலே......”

“எனக்குத் தெரியாதாக்கும்......ஏதோ கோபத்திலே இரண்டு வார்த்தை சூடாகச் சொன்னால், அதற்காகவா இப்படி வருத்தப்படணும்! இனிமேல் நான் புது மனிதன், விசாலம்! என் மனத்தின் பலவீனத்தை உதறி யெறிந்து விட்டேன் . ...”

இலக்கிய நீதியில் அவன் பேசியதைக் கேட்டு, 'கலீ'ரென்று சிரித்தாள் விசாலம்.

தூய அன்பும், விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையும்தானே தாம்பத்தியத்தின் வெற்றிக்கு மூல காரணம்? பரஸ்பரம் மாறாத பிரேமை மாத்திரம் பரிணமித்திருக்குமானால் அதுவே ஸ்வர்க்கானுபவ மல்லவா? எந்தப் பிரிவுதான் அதில் பிளவை உண்டு பண்ண முடியும்?

அந் நிலையில், அந்த இளம் தம்பதிகளின் உள்ளத்திலும், ஏககாலத்தில் இந்த எண்ணம்தான் மின்னலிட்டது.

* * *

'நாட்டேறை' மூடியிருந்த தட்டிக்கு வெளியே சிவராமய்யரும், மீனாக்ஷியம்மாளும் ஒருவரையொருவர் அர்த்த புஷ்டியுடன் பார்த்துக் கொண்டனர். பெண்ணும், மாப்பிள்ளையும் பேசிக் கொண்டதைக் கேட்டறிந்திருந்த அவர்கள் மனத்திலும் புது உற்சாகம் தலையெடுத்தது. சிவராமய்யர் இப்போதுதான் சானடோரியத்தின் வெளிப்புறத்து அற்புதமான நிலவுக் காட்சியை ரஸித்தார். வெண்மேகம் ஒன்றிலிருந்து பிரிந்துக் கிளம்பிய சந்திரன், தன்னுடைய லாவண்யமான கிரணங்களினால், இயற்கை யன்னையின் உடலுக்குப் புது மெருகு பூசிக் கொண்டிருந்தான். அந்த மலர்ச்சியை, புத்துயிர் பெற்றுப் பெரு வாழ்வு வாழவிருக்கும் விசாலம்—தியாகராஜன் தம்பதிகளின் வாழ்வோடு ஒப்பிட்டுப் பார்த்துப் பெருமிதம் கொண்டது அவருடைய உள்ளம்.

# மந்திரவாதி விளையாட்டு

சாமா

ஒரு நாள் ராமுவும் குண்டுமணியும் வந்து "டேய் பசங்களா! நீங்களெல்லாரும் எதிரே உட்காருங்கள். நாங்கள் ஒரு பெரிய மந்திரவாதியிடம் போய் ஏழு நாள் பட்டினி இருந்து ஒன்று கற்றுக்கொண்டு வந்திருக்கிறோம். அது என்னது தெரியுமா? அது தான் மாயஜால வித்தை. இப்பொழுது ஒரு வித்தையை உங்களுக்குச் செய்து காண்பிக்கப் போகிறோம்" என்று சொன்னார்கள். அவ்வளவு தான்; பையன்கள் எல்லோரும் ஆரவாரம் போட்டு, "பலே! பலே! பேஷ்!" என்றார்கள்.

"இதோ பாருங்கள். இது என்ன தெரிகிறதா? இது ஒரு கிளாஸ் டம்ளர். இதில் நிறையத் தண்ணீர் ஊற்றுகிறேன். இப்பொழுது இந்த டம்ளரைத் துணியால் மூடித் திறக்கிறேன். தண்ணீரில் மாய மீன்கள் நீந்துவதைப் பார்க்கலாம்" என்று சொல்லி விட்டுக் குண்டுமணி கண்ணாடி டம்ளரில் தண்ணீர் ஊற்றி மூடினான்.

ராமு 'சூ மந்திரக்காளி, அந்திராக்காளி, சமுத்திராக்காளி, மாயாக்காளி!' என்று மந்திரம் சொல்லி டம்ளரைத் திறந்தான்.

"ஐயையே, இது என்ன வித்தை! டம்ளரில் இருந்த ஜலத்தையும் காணோம். மீனையும் காணோம்!" என்று பையன்கள் பரிகாசம் செய்ய ஆரம்பித்து விட்டார்கள். "டம்ளர் ஓட்டை டோய்!" என்றான் சங்கர்.

மந்திரவாதி ராமு, "உங்களுக்கு விஷயம் புரியாமல் கத்துகிறீர்கள். என்ன நடந்திருக்கிறது என்று மந்திர சக்தியினால் பார்த்து விட்டேன். மாய மீன்கள் ரொம்ப தூரத்திலிருந்து தாங்கள் வந்த களைப்பினால் டம்ளர் ஜலத்தைக் குடித்து விட்டன!" என்றான். "அப்பொழுது மீன்களாகிலும் டம்ளரில் இருக்க வேண்டாமா? அவைகள் எங்கே? காட்டு!" என்றான் சங்கர்.

மந்திரவாதி ராமு கொஞ்சமாகிலும் கலங்காமல் "அதுதான் மாய மீன்கள் என்று சொன்னேனே? அவைகள் கண்களுக்கு எப்படித் தெரியும். எனக்குத்தான் தெரியும். உங்களுக்குத் தெரியாதுதான்!" என்று அடித்துச் சொன்னான்.

உடனே பையன்கள் எல்லாரும் காதோடு என்னவோ பேசிக் கொண்டார்கள்.

பிறகு, "டேய் ராமு, குண்டுமணி! நீங்கள் இரண்டு பேரும் சற்று முன் சொன்னபடி எங்களுக்கு மாய மீன்கள் காண்பிக்காவிட்டால் உங்களை நாங்கள் என்ன பண்ணுகிறோம் பாருங்கள்!" என்று சொல்லி எல்லாப் பையன்களும் சேர்ந்து ராமுவையும், குண்டுமணியையும் துரத்திக் கொண்டு தெருவெல்லாம் ஓடினார்கள். அவர்கள் ஒருவர் கைக்கும் அகப்படாமல் ரொம்ப வேகமாக குண்டுமணியும் ராமுவும் ஓடினார்கள். அப்படி ஓடினவர்களுக்கு எதிரே சொல்லி வைத்தாற்போல் ஒரு செம்படவன் மீன் கூடையைச் சுமந்துகொண்டு வந்தான். குண்டுமணி அவனைப் பார்க்காமல் ஓடி அவன் மேலே மோதிக் கீழே தள்ளி விட்டுத் தானும் விழுந்தான். ராமுவும் கூடவே வந்து விழுந்தான். இரண்டு பேர் உடம்பு முழுவதும் மீன் அபிஷேகமாக இருந்தது.

பையன்கள் எல்லோரும் 'கூ, கூ' வென்று சிரித்தார்கள். "வேணும் கட்டைக்கு வேணும்! வெண்கலக் கட்டைக்கு வேணும்!" என்று குதித்துக் கொண்டே போனார்கள்.




## 2. சங்கரன் அரசனானான்!

சங்கரனை ஏற்றிச் சென்ற படகு போய்க் கொண்டேயிருந்தது. 'ஓ' வென்ற பேரிரைச்சலுடன் சமுத்திர அலைகள் மோதும்போது படகு கவிழ்ந்து விடுமோ என்று தோன்றியது. சங்கரனுக்கு மட்டும் பயம் அதிகமாகத் தெரியவில்லை. அவன்தான் கண்களைக் கெட்டியாக மூடிக் கொண்டு விட்டானே? ஆனால் அவன் உடம்பு மட்டும் 'வெட வெட'என்று நடுங்கியது. அதற்குக் காரணம் பயம் அல்ல; பல்லைக் கிட்டும் குளிர்தான்.

நடுக்கடலில் அந்தமாதிரி நடுங்கிக் கொண்டே எத்தனை தூரம் போனான் என்று சங்கரனுக்குத் தெரியாது. பொழுது விடிந்து வெய்யில் அவன் மேல் உறைக்க ஆரம்பித்த பிறகுதான் அவன் கண்ணை விழித்துப் பார்த்தான். ஆனால் அப்பொழுதும் அவன் கொந்தளிக்கும் சமுத்திரத்தில்தான் போய்க் கொண்டிருந்தான்.

'எத்தனை நாளைக்கு இந்தமாதிரி போய்க்கொண்டிருக்க முடியும்? இந்த எல்லையற்ற பிரயாணம் எங்கேபோய் முடியுமோ? சமுத்திரத்திலேயே முழுகி உயிர் விடுவதைத் தவிர வேறு வழி இருப்பதாகத் தெரியவில்லையே!' என்று நினைத்துச் சங்கரன் துக்கம் தாங்காமல் கண்ணீர் விட்டான்.

முதலில் இவ்வளவும் கனவு என்று நினைத்தான். ஆனால் நேரம் ஆக ஆக அவனுக்கு உண்மையிலேயே தான் கடலில் மிகவும் ஆபத்தான நிலையில் இருப்பது தெரிந்தது. ஆனால் அதற்கு அவன் என்னத்தைச் செய்ய முடியும்? தன் பலம் கொண்ட மட்டும் 'உதவி! உதவி!' என்று கத்தலாமா என்று சங்கரன் நினைத்தான். ஆனால் ஜன சஞ்சாரமற்ற நடுச் சமுத்திரத்தில் அவனுக்கு உதவி செய்ய யார் வருவார்கள்? மேலும் தன் இஷ்டப்படி செல்லும் அந்தப் படகில் எழுந்து நிற்பதற்கே சங்கரனுக்கு அச்சமாயிருந்தது. அதற்கு ஏற்றாற்போல, மலைபோன்ற அலைகள் கிளம்பி அந்தப் படகைக் கவிழ்த்து விடுவதற்கு முயற்சி செய்தன. சங்கரனுக்கு என்ன செய்வதென்றே தோன்றவில்லை.

அந்தச் சமயம் அந்த வழியாக ஒரு கப்பல் வந்தது. கப்பல் மாலுமிகளில் ஒருவன் மேல் தட்டிலிருந்து சமுத்திரத்தைத் தூரதர்சினியின் மூலம் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் பார்வை, ஆளில்லாமல் தானாகச் செல்லும் படகின்மேல் விழுந்தது. அவன் உற்றுக் கவனித்தான். தூரதர்சினியின் மூலம் அந்தப் படகில் சங்கரன் நடுங்கிக் கொண்டு படுத்திருப்பது நன்றாய்த் தெரிந்தது.

உடனே மாலுமி பரபரப்புடன், ஆபத்துக் காலத்தில் உதவுவதற்காகக் கப்பலில் வைக்கப்பட்டிருக்கும் பட

யைத் தக்க ஆட்களுடன் அனுப்பி அந்தப் படகைக் கவிழ்ந்து விடாமல் கப்பலுக்குக் கொண்டு வந்து சேர்க்கும்படி ஏற்பாடு செய்தான்.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் சங்கரன் கப்பலுக்கு வந்து சேர்ந்தான். கப்பல் மாலுமிகள், அவன் எப்படிப் படகில் தனியாக அகப்பட்டுக் கொண்டான் என்கிற விஷயத்தைச் சொல்லும்படி கேட்டனர்.

"நான் தூங்கிக்கொண்டிருக்கும்போது என்னை யாரோ படகில் கட்டிப்போட்டிருக்க வேண்டும் என்று நினைக்கிறேன். நேற்று, பாதி ராத்திரியில் திடீரென்று நான் விழித்துக் கொண்டேன். அப்போது சமுத்திரத்தில் படகில் நான் மிதந்துகொண்டிருப்பது தெரிய வந்தது!" என்று சொன்னான் சங்கரன்.

மாலுமிகள் அவனுக்கு வேண்டிய ஆகாரங்களைக் கொடுத்து அவன் பசியைத் தணித்தனர்.

பிறகு கப்பல் வெகு தூரம் சென்று ஒரு பெரிய தீவின் துறைமுகத்தை அடைந்தது. மாலுமிகள் சங்கரனை அங்கே இறக்கி விட்டனர்.

சங்கரனுக்கு ஒன்றும் புரியவில்லை. அது மூற்றிலும் புதிய ஊராயிருந்தது. மனம் போன போக்கில் சங்கரன் போய்க் கொண்டிருந்தான்.

அந்த ஊரில் எங்கே பார்த்தாலும் போர்டுகள் தென்பட்டன. அவற்றில் எல்லாம் "இந்த ஊர் ராஜாவின் அரண்மனையில் அவரது அறையின் ஜன்னலில் மூன்று காகங்கள் ஓயாமல் கரைகின்றன. விரட்டினால் நகருவதில்லை. மகாராஜா இந்தக் காகங்களின் தொல்லை தாங்காமல் தவிக்கிறார். ஆறு மாதமாக ஓயாமல், இரவு வேளை தவிர, அந்தக் காகங்கள் சதா கரை



கின்றன. அவை என்னத்துக்காகக் கரைகின்றன என்பதைக் கண்டு பிடித்துச் சொல்லுவதோடு அவைகள் இனி மேல் கத்தாமல் இருக்க வழியும் சொல்ல வேண்டும். இதைச் செய்பவருக்கு ராஜகுமாரியையும் ராஜ்யத்தையும் கொடுக்க மகாராஜா தயாராயிருக்கிறார்!" என்று எழுதியிருந்தது.

சங்கரனுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. அவனுக்குத்தான் பறவைகளின் பாஷை தெரியுமே! அரண்மனையை நோக்கி உற்சாகத்துடன் உடனே நடையைக் கட்டினான்.

அரண்மனை வாசலை அடைந்ததும் வாயிற் காவலனைப் பார்த்து, "காவலாளியே, அரசனுடைய அறையின் ஜன்னலில் ஓயாமல் கரையும் காகங்களை நான் பார்க்க வேண்டும். அவை ஏன் கரைகின்றன என்று நான் கண்டு பிடிக்க விரும்புகிறேன்!" என்றான்.

வாயிற் காவலன் அலட்சியமாக அந்தக் காகங்கள் கரையும் அறையின் ஜன்னலுக்கு அவனை அழைத்துச் சென்றான். அந்தக் காவலன் தான் தினந்தோறும் இம்மாதிரி எத்தனையோ பேரைப் பார்த்து வருகிறானே!

காகங்கள் மூன்றும் வரிசையாக உட்கார்ந்து ஓயாமல் கரைவதைக் கேட்ட மறு நிமிஷமே சங்கரனுக்கு அதன் அர்த்தம் விளங்கி விட்டது.

உடனே சங்கரன் அரசனிடம் சென்று "மகாராஜா, காகங்கள் என்னத்துக்காக ஓயாமல் கரைகின்றன என்பது எனக்குத் தெரியும். சொல்லலாமா?" என்று பணிவுடன் கேட்டான்.

அரசனுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை.

"பறவைகளின் பாஷை நன்றாய்த் தெரிந்தவன் மாதிரி அலட்சியமாகப் பேசுகிறாயே? உன்னைப் போல் எத்தனையோ பேர் வந்து என்னென்

னவோ சொல்லி விட்டார்கள். ஆனால் ஒன்றும் பயன்படவில்லை. எனக்கு இப்போதெல்லாம் காகங்களின் தொந்தரவு கூடத் தெரியவில்லை. உன்னைப் போல் காகங்கள் கரைவதின் பொருளைக் கண்டு பிடிப்பதாகக் கூறிக் கொண்டு வருகிறார்களே அவர்கள் தொந்தரவுதான் பெரிதாயிருக்கிறது!" என்றான் அரசன்.



"மகாராஜாவே, உண்மையிலேயே எனக்குப் பறவைகளின் பாஷை தெரியும். நீங்கள் கொஞ்சமும் என் மீது சந்தேகப்பட வேண்டாம்!" என்றான்.

வாலிபனான சங்கரனுடைய முகத் தோற்றத்தில் மயங்கிய அரசன், "சரி. அந்தக் காகங்கள் என்ன சொல்லுகின்றன? சொல், பார்க்கலாம்!" என்றான்.

"தாய்க் காகமும் தந்தைக் காகமும் தங்கள் மகன் யாருடன் இருக்க வேண்டும் என்பதைத்தான் தங்களைக் கேட்கின்றன. பிள்ளைக் காகமும் அதைத் தான் கேட்கிறது!" என்றான் சங்கரன்.

அரசன், "இவ்வளவு தானே! மகன் தகப்பனாரிடம் இருக்க வேண்டும். தாய் மகனிடம் இருக்க வேண்டும்!" என்றான்.

"மகாராஜா, இதை அந்தக் காகங்களைப் பார்த்துச் சொல்லுங்கள்!" என்றான்.

அரசன் அதேமாதிரி சொன்னான். காகங்கள் மூன்றும் உடனே மறைந்து விட்டன.

அரசனுக்கு உண்டான அதிசயத்துக்கு எல்லையில்லை. பல மாதங்களாக ஓயாமல் காகங்கள் கரைந்து வந்தன. என்னத்தை யெல்லாமோ செய்து பார்த்தும் அவை நகரவில்லை. அவை மந்திரத்துக்கும் அசையவில்லை. தந்திரத்துக்கும் அசையவில்லை. கடைசியில் சங்கரன் அவைகளை ஒரு நிமிஷத்தில் விரட்டி விட்டானே!

அரசன் நகரத்தைப் பிரமாதமாக அலங்கரிக்கும்படி உத்தர விட்டான். தேசத்துக்குப் புதிய அரசன் வருகிறான் என்றால் சும்மாத் தானா? அத்துடன் அவன் மகாராஜாவின் மாப்பிள்ளை!

அரசன் சங்கரனுக்குத் தன் ராஜ்யத்தையும் கொடுத்துத் தன் அருமைக் குமாரியையும் விமரிசையாக விவாகம் செய்து கொடுத்தான். அந்தத் தேசம் முழுவதும் உற்சாகத்தில் ஆழ்ந்தது.

சங்கரனைச் சிறு வயது முதல் எடுத்து வளர்த்த பிரபு, முன்பு வானம்பாடி சொன்ன மாதிரியே சகல சொத்துக்களையும் இழந்து பரம ஏழையாகி விட்டான். அவன் சங்கரனை நினைத்து நினைத்து வருந்தினான். சங்கரனுக்குத் தான் செய்த துரோகத்தை நினைத்துக் கண்ணீர் விட்டான்.

சங்கரன் அரசனானதும் முதலில் அவன் செய்த காரியம் என்ன தெரியுமா? தன்னைச் சிறு வயது முதல் எடுத்து வளர்த்த பிரபுவைத் தேடி அழைத்து வரும்படி தன் மந்திரியை அனுப்பி வைத்தான்.

பிரபு வந்து சேர்ந்ததும் அவனுக்குச் சங்கரனைப் பார்க்கவே வெட்கமாயிருந்தது. 'நான் அவனைத் தீர்த்துவிட நினைத்துக் கடலிலே தள்ளியதற்கு அவன் இப்பொழுது, எவ்வளவு அன்பாயிருக்கிறான்!' என்று நினைத்து வருந்தினான். ஆனால் சங்கரன் அவனை வருந்தும்படி விடவில்லை.

பிறகு சங்கரன் அரசனானதும் செய்த அடுத்த காரியம் என்ன தெரியுமா? உங்களுக்குத் தெரிந்ததுதான். அரண்மனை நந்தவனத்தில் உலகத்தில் உள்ள எல்லாப் பறவைகளையும் வரவழைத்து வளர்த்து வந்தான். பறவைகள் அவனிடம் மிகவும் அன்பாக இருந்தன. ஆகவே அவனை ஊரில் எல்லாரும் 'பறவை மன்னன்' என்று அழைக்க ஆரம்பித்தனர். **(முற்றும்)**




**என். எஸ். மணி**

சுசீலாவுக்கு, நினைவு தெரிந்த நாள் முதல் துன்பமும் வேதனையுமே உற்ற துணைகளாக இருந்து வந்திருக்கின்றன. அதனால், அவைகளைக் கண்டு பயப்படுவதை விட்டொழித்து இன்று தானாகச் சம்பாதித்துத் தன் வாழ்க்கையை நடத்தக்கூடிய அளவுக்கு அவள் மனோ திடம் பெற்றிருந்தாள். இருந்தாலும் இன்று அவள் அநுபவித்த வேதனையைப் போல இதற்கு முன் ஒரே ஒரு தடவைதான் அநுபவித்திருக்கிறாள். பல வருஷங்களாகத் தன்னை வளர்த்து வந்தவர்கள் தன்னுடைய சொந்தத் தாய் தந்தையர் அல்ல என்பதை அவர்கள் ஒரு நாள் போட்ட கூச்சலிலிருந்தும் சண்டையிலிருந்தும் தெரிந்து கொண்டாள். அப்புறம் தான் அவளுக்குத் தான் அப்பா என்று நினைத்திருந்தவர் எப்பொழுதும் தன்னைக் கொடுமையாகவே நடத்தும் காரணம் புலப்பட்டது. 'அம்மா' என்று நினைத்திருந்தவளும், சில சமயம் கருணை புடனிருந்தாலும், உண்மையான அன்பைக் காட்டவில்லை. அதனால் அவள் தன் சொந்தத் தாய் தந்தையரை நினைத்து அன்று ஏங்கித் துடித்தாள். எவ்வளவோ கஷ்டங்களை அவள் பார்த்திருக்கிறாள். இருந்தாலும் தன்னை வளர்த்து வந்தவர்களும் தன்னை நிர்க்கதியாக விட்டுப் போய்விடவே அவளுக்கு அனாதை ஆசிரமத்தில் வாழும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டது. படிப்பு முடிந்தவுடன் சுசீலாவுக்கு ஒரு கம்பெனியில் வேலை கிடைத்தது.

இதுவரையில் அவளுடைய துன்பத்திற்கும் வேதனைக்கும் காரணம், வாழ்க்கையில் பட்ட கஷ்டங்கள் என்றால், இன்று அவள் அநுபவிக்கும் கொடிய வேதனைக்குக் காரணம், சில மாதங்களுக்குமுன் அவள் வாழ்க்கையில் வந்து படிந்த எதிர்பாராத இன்பம் என்று சொல்ல வேண்டும். இன்பத்திற்குப் பின் இவ்வளவு பெரிய வேதனை மறைந்திருக்கிறதென்று தெரிந்திருந்தால் அதன் அருகில் கூடப் போய் இருக்க மாட்டாள் சுசீலா.

சில மாதங்களுக்கு முன்புதான், அவள் வேலை பார்த்து வந்த கம்பெனிக்கு மூர்த்தி என்பவர் மானேஜராக வந்தார். அவர் வயதில் சிறியவராக இருந்தாலும், அவர் பெற்றிருந்த பட்டங்களை வைத்துக் கொண்டு ஒரு குழந்தைக்கு ஆங்கில எழுத்துக்களை ஒன்றுகூட விடாமல் கற்றுக் கொடுத்து விடலாம்!

சுசீலா புது மானேஜராக வரப்போகும் மூர்த்தியின் பட்டங்களைப் பற்றித்தான் முதலில் கேட்டாள். அவைகளின் எண்ணிக்கையிலிருந்து அவன் வயதைக் கிட்டத் தட்ட ஐம்பதுக்கு மதிப்பிட்டிருந்தாள். 'முதல் நாளே அந்தக் கிழத்தின் வாயில் ஏன் போய் மாட்டிக் கொள்ள வேண்டும்' என்ற எண்ணத்துடன் அவன் வந்த தினத்தன்று, முன் ஜாக்கிரதையாகச் சற்று முன்னதாகவே காரியாலயத்திற்கு வந்து தன் இடத்தில் அமர்ந்தாள்.

சில நிமிஷங்களுக்குப் பிறகு நவநாகரிக உடையணிந்த வாலிபன், மிடுக்காக உள்ளே நுழைவதையும், பின்னால் ஒரு சேவகன் பெட்டியைத் தூக்கிக் கொண்டு வருவதையும் கவனித்தாள். அவன்தான் புது மானேஜர் என்பதை ஊகித்த அவள், 'இவ்வளவு பட்டங்களையும், இவர் இவ்வளவு சிறிய வயதில் சம்பாதித்து விட்டாரே! எப்பேர்ப்பட்ட திறமைசாலியாக இருக்க வேண்டும்!" என்று அதிசயப்பட்டாள்.

மூர்த்தி வந்த பிறகு காரியாலயம் புத்துயிர் பெற்றது என்றே சொல்ல வேண்டும். வேலைகளை வேண்டுமென்றே செய்யாமல் காலம் கடத்தும் குமாஸ்தாக்கள் வேலைகளைச் சீக்கிரம் முடித்து விட்டுக் கொஞ்ச நேரம் சும்மா இருந்தால், 'ஏன் வேலையில்லையா!' என்ற கேள்வி வருமே என்று பயந்து கொண்டு கையில் கொஞ்சம் வேலையைப் பாக்கி வைத்துக் கொண்டேயிருப்பார்கள். கூடுமான வரையில், புது வேலை வரும்வரையில் பழைய வேலையை நிதானமாக நிரவிவிட்டுக் கொண்டிருப்பார்கள். ஆனால் மூர்த்தி இந்த மனப்பான்மையை மாற்ற நேர்விரோதமான கொள்கையை அநுஷ்டித்தான். வேலையை முடித்துவிட்டுச் சற்று ஓய்வு எடுத்துக் கொள்பவர்களை, அவன் ஏன் என்று கூடக் கேட்கவில்லை. எப்பொழுதும் வேலை செய்வதைப் போல் பாவனை பண்ணுபவர்களைத்தான் கூப்பிடுவான். "உங்களுக்கு வேலை அதிகமாக இருக்கிறதா? சுறு சுறுப்பாக

வும் சரியாகவும் வேலை செய்ய வேண்டுமானால், நடு நடுவே ஓய்வு அவசியம். வேலை அதிகமாக இருந்தால், இந்த வசதி கிடைக்காது. உண்மையைப் பயமில்லாமல் சொல்லுங்கள். நான் உதவி செய்கிறேன்" என்பான்.

மூர்த்தியின் இந்தக் கொள்கை குமாஸ்தாக்களுக்குப் புதிதாக இருந்தது. தவிரவும் "இந்தக் காரியாலயமே, உங்களுடையது. நான் உங்களுடைய சிநேகிதன். உங்கள் கஷ்டங்களை என்னிடம் சொல்லுங்கள். என்னால் முடிந்தவரையில் உதவி செய்கிறேன்" என்று மூர்த்தி அடிக்கடி வற்புறுத்தவே, எல்லோரும் ஒரு முகமாக அவனை நேசிக்க ஆரம்பித்தார்கள்.

இப்படி எல்லோரிடமும் மூர்த்தி கருணையுடன் நடந்து கொண்டான் என்றாலும், தன்னிடம் ஒரு தனிப் பரிவு காட்டுவதாகவே சுசீலாவுக்குப் பட்டது. உண்மையில் சுசீலாவின் குறுகுறுப்பான முகத்தில், இளமையில் அவள் பட்ட கஷ்டங்கள் விட்டுப்போன சோர்வு இருந்தாலும், அதன் அழகு மூர்த்தியை வசப்படுத்திவிட்டது. அதுவும் அவளது அடக்கமான குணமும், எதையும் சட்டென்று புரிந்துகொள்ளும் புத்திக் கூர்மையும் அவளிடத்தில் அவனுக்கு ஒரு மதிப்பையும், தனிப் பரிவையும் உண்டாக்கியிருந்தன.



இந்த நாட்களில் சுசீலா, ஒரு ஆனந்தமயமான உலகத்தில் சஞ்சரித்து வந்தாள். அந்த உலகில் மூர்த்தியையும், அவளையும் தவிர வேறு ஒருவருமே யில்லை. இந்த இன்பம் வெகுநாள் அவளுக்கு நீடித்திருக்கவில்லை. ஒரே கணத்தில் அது ஆரம்பத்தில் குறிப்பிட்ட கொடிய வேதனையாக மாறிவிட்டது. அதற்குக் காரணம் மூர்த்தி அவளைக் கேட்ட அந்த ஒரு கேள்விதான்.

"சுசீலா, உன் அப்பா, அம்மா எங்கிருக்கிறார்கள்? விலாசம் எனக்கு அவசியம் வேண்டும்" என்ற கேள்விதான் அது.

சுசீலா அதற்குப் பதில் கூறாமல் கண்ணீர் விடுவதின் காரணம் தெரியாமல் அவன் திகைத்தான்.

சுசீலா, தனக்குத் தெரிந்தவரையில் உண்மையை மறைக்காமல் அவனிடம் கூறிவிட்டாள். தன்னை வளர்த்தவர்கள், தன் உண்மையான பெற்றோர்களைப் பற்றித் தெரிவிக்காமலே போய் விட்டார்கள் என்பதையும் சொன்னாள்.

இதைக் கேட்டபொழுது, மூர்த்திக்கு அவளிடம் மிகுந்த அனுதாபம் ஏற்பட்டது. இந்த வயதிற்குள் இவ்வளவு துன்பங்களை அனுபவித்துவிட்ட அவள் வாழ்க்கையை இனி இன்பமயமானதாகச் செய்துவிட வேண்டும் என்ற ஆசை அவன் மனத்தில் எழுந்தது. ஆனால் கூடவே, பெற்றோர் பெயர் தெரியாத பெண்ணைத் தன் பெற்றோர்கள் குடும்பத்தில் ஏற்க மறுப்பார்களே என்ற எண்ணமும் எழுந்தது. இருந்தாலும் அவன் அதிகமாக அவர்களைப் பற்றிக் கேட்டுத் தொந்தரவுசெய்ய விரும்பவில்லை. சுசீலா குனிந்த தலையுடன் அவனிடம் விடை பெற்றுக் கொண்டாள்.

உள்ளக் குமுறலினால், சுசீலாவின் முகம் மிகவும் களையிழந்து காணப்பட்டது. இதைக் கண்ணுற்ற, அவள் இருந்த ஆசிரமத்தின் தலைவி, "சுசீலா, நீ ஓய்வே இல்லாமல் இப்படி வேலை செய்வது நல்லதில்லை. என் தங்கை ஒருத்தி கிராமத்தில் பள்ளிக்கூடம் நடத்துகிறாள். நான் ஒரு கடிதம் எழுதித் தருகிறேன். சில நாட்கள் அங்கு போய் இருந்து விட்டு வாயேன்" என்று வற்புறுத்தினாள்.

சிறிது நேரம் யோசனையிலாழ்ந்து இருந்து விட்டுச் சுசீலா அதற்குச் சம்மதித்தாள்.

மறு நாள் சுசீலா காரியாலயத்துக்குப் போனதும் மானேஜர் மூர்த்தியிடம், ஒருமாத ஓய்வு வேண்டி விண்ணப்பம் செய்து கொண்டாள். மனக்குழப்பம் காரணமாகத்தான் சுசீலா ஓய்வு பெற விரும்புகிறாள் என்பது மூர்த்திக்குத் தெரியாமலில்லை. ஆனால் அவளைத் தடுத்து நிறுத்த அவன் விரும்பவில்லை. ஆகவே ஒரு மாத ஓய்வு பெற அனுமதித்தான் அவன்.

சுசீலா கிராமத்துக்குப் போகத் தீர்மானித்ததே ஒரு எண்ணத்தை மனத்தில் வைத்துக் கொண்டுதான். அதன் பிரகாரம், புறப்படுமுன் மூர்த்திக்கு ஒரு கடிதத்தை அனுப்பினாள். அதில் "உங்கள் அன்பில் எனக்குப் பரிபூரண நம்பிக்கை இருக்கிறது. எங்கேயாவது

அந்த அன்பின் காரணமாக அரும்பாடு பட்டு வளர்த்து உங்களை இந்த நிலைக்குக் கொண்டு வந்திருக்கும் பெற்றோர்களுக்குத் தீராத மனக் கஷ்டத்தை உண்டாக்கி விடுவீர்களோ என்ற பயத்தில்தான் நான் மறுக்கிறேன். அப்படி நீங்கள் செய்வதை நான் எப்படி விரும்ப முடியும்? உங்களையும், உங்களுக்கு அளித்த வாக்குறுதியையும் மறவேன். என் ஸ்தானத்திற்கு, காரியாலயத்தில் நீங்கள் வேறு ஆளை நியமனம் செய்துவிடலாம்''... என்று இருந்தது. மூர்த்தியின் அருகில் இருந்து கொண்டு, இந்தத் தியாகத்தைச் செய்ய அவளுக்குச் சக்தி ஏது!

அவள் வந்து சேர்ந்த கிராமம் ரொம்பவும் குக்கிராமமாக இல்லை. அக்கிராமத் தலைவியின் தங்கை, அவளை அன்புடன் வரவேற்று வேற்றுமை சிறிதுமில்லாமல் பழகும்படி கேட்டுக் கொண்டாள். சில தினங்களுக்குள்ளாகவே, அவளும் சௌஜன்யமாகப் பழகிவிட்டாள்.

சுசீலாவுக்கு அந்தக் கிராமத்தில் மிகவும் பிடித்தமான இடம், கோவில் நந்தவனம்தான். அவளுடைய அப்போதைய மனோ நிலைக்கு, அந்த இடத்திற்கு அநேகமாக ஒருவரும் வருவதில்லை என்ற ஒரு காரணமே ரொம்பவும் உகந்ததாயிருந்தது என்று சொல்லலாம். புஷ்பச் செடிகளையும் மரங்களையும் தவிர, வேறு யார் கண்ணிலும் படாமல், எவ்வளவு மணி நேரம் வேண்டுமானாலும் அங்கே உட்கார்ந்து கொண்டு கண்ணீர் விடலாம். இந்த வசதியை அவள் அடிக்கடி பயன்படுத்திக் கொண்டாள்.

திடீரென்று கிராமத்தில் ஒரு கலகலப்பு ஏற்பட்டது. இதைக் கண்ட சுசீலா, ''அம்மா, இன்றைக்கு என்ன விசேஷம்! கிராமம் முழுவதும் அமர்க்களப்படுகிறதே!'' என்று பள்ளிக்கூடத் தலைவியிடம் கேட்டாள்.

''பக்கத்து நகரத்திலிருந்து மகாதேவன் வரப்போகிறார்'' என்று அவள் சொன்னவுடன், சுசீலாவுக்கு விஷயம் பிடிபடவேயில்லை. ''ஒரு மனிதர் வருவதற்கு இவ்வளவு கலகலப்பா!'' என்று கேட்டாள்.

''அது ஒரு பெரிய கதை. வேண்டுமானால் கேள். சொல்கிறேன்'' என்று பள்ளிக்கூடத் தலைவி ஆரம்பித்தாள்:

''எனக்கும் நான் சொல்லப் போகும் விஷயங்களெல்லாம் இங்கிருப்பவர்கள் சொல்லக் கேட்டுத்தான் தெரியும். மகாதேவன் இந்தக் கிராமத்திற்குப் பதின்மூன்று வருஷத்திற்கு முன்னால் வந்தார். அப்பொழுது அவருக்குக் கொஞ்சம் நிலபுலன் இருந்தது. தவிரவும் தோட்ட வேலையில் அபார ஆர்வம் கொண்டவர். இப்பொழுது கோவில் நந்தவனமாக இருக்கிறதே! இதுதான் அவர் தோட்டமாக விளங்கியது. தோட்டத்தைக் கொத்துவது, களை யெடுப்பது, தண்ணீர் பாய்ச்சுவது இவைதாம் அவருடைய பொழுது போக்கு.

''அப்பொழுது அவருக்கு நான்கு வயதில் ஒரு பெண் குழந்தை இருந்தது. வீட்டிற்கும் நந்தவனத்திற்கும் அதிக தூரம் இல்லாததால், அவர் குழந்தையும் தனியாக அங்கு போய் விளையாடிக்கொண்டிருக்கும். பொழுது சாய்ந்ததும் குழந்தை அப்பாவிடம் தன்னை வீட்டிற்குத் தூக்கிக் கொண்டு போகச் சொல்லும்.

''இப்படி வழக்கமாக நடந்து வருகையில், ஒரு நாள் அந்தக் குழந்தை காணாமல் போய் விட்டது. சாயங்காலம் வீட்டை விட்டுப் புறப்பட்ட குழந்தை நந்தவனத்திற்கு வந்து சேரவில்லை. அவர் வேலையில் கருத்தாயிருந்ததால், இதை உடனே கவனிக்கவில்லை. பிறகு எங்கு தேடியும் அது அகப்படவேயில்லை. இதனால் அவர் மனம் இடிந்து போனார். அவர் மனைவி சோகத்தில் சீக்கிரம் இறந்துபோனாள்.

''அப்பொழுது கிராமத்தை விட்டுப் பக்கத்து நகரத்திற்குச் சென்றார் மகாதேவன். அங்கே அவர் ஆரம்பித்த தொழில் பெருகி அவருக்குச் செல்வம் கொழித்தது. லக்ஷக்கணக்கில் பணம் வந்தது. ஆனால் அவர் இழந்த தன் செல்வத்தை மறக்கவேயில்லை. அவர் குழந்தை விளையாடிய தோட்டத்தை நந்தவனமாக்கி இறைவன் திருப்பணிக்காகக் கொடுத்தார். இந்தக் கிராமத்திற்குப் பல நன்மைகள் செய்தார். அவர் குழந்தையின் ஞாபகார்த்தமாகத்தான் இந்தப் பள்ளிக்கூடமும் நடந்து வருகிறது. இந்தக் கிராமத்தில் யாருக்கு எந்தக் கஷ்டம் வந்தாலும் அவர்தான் தீர்த்து வைக்கிறார். அடிக்கடி இங்கே வந்து தம்முடைய பூர்வீகமான பழைய வீட்டில் தங்குவார். ஏதாவது ஒரு புதிய நன்கொடையைச் செய்து விட்டுப் போவார். இதனால்தான் அவரிடம் இந்தக் கிராமவாசிகளுக்கு இவ்வளவு பக்தி'' என்று முடித்தவுடன் சுசீலாவுக்கு மகாதேவனைக் காண வேண்டும் என்ற ஆவல் எழுந்தது.

இதற்குக் காரணம், அவள் உள்ளத்தில் எழுந்த ஒரு சிறிய எண்ணம்தான். ஒரு வேளை அவரே தன் தகப்பனாக இருக்கலாம் அல்லவா! அந்த எண்ணத்திற்கு, அவள் அறிவு உடனே முற்றுப்புள்ளி வைத்தது. இந்தக் கிராமத்தையோ இந்த நந்தவனத்தையோ, இந்த ஜன்மத்தில் இதற்கு முன் பார்த்திருப்பதாக அவளுக்கு ஞாபகம் இல்லை. தவிரவும் எவ்வளவு முயற்சி செய்தும் தன் நான்கு வயதில் நடந்த சம்பவம் இன்னும் அவள் நினைவுக்கு வரவில்லை. ஆகவே, அவள் ஆதாரமற்ற அந்த எண்ணத்தை அடித்து விரட்டினாள்.

மகாதேவன் ஆடம்பரமற்றவராக இருக்



து அவள் மனதை மிகவும் கவர்ந்தது. எப்பொழுதும் நல்ல காரியங்களையே செய்து வருபவர்களின் முகத்தில் பார்க்கக்கூடிய தூய்மையும் அவர் முகத்தில் பிரதிபலித்ததைக் கமலா பார்த்தாள். 'இவரைத் தந்தையாக அடைய எவ்வளவோ தவம் செய்திருக்க வேண்டும். அப்படிச் செய்திருந்தால் இவ்வளவு சின்ன வயதில் இவ்வளவு துன்பங்களுக்கு ஏன் ஆளாகி யிருக்க வேண்டும்!' என்று ஒரு எதிர்க் கேள்வி போட்டுத் தன் மனத்தில் எழுந்த அந்த எண்ணத்திற்கு அணை போட்டாள். ஆனால் சில சமயம் மனத்தில் ஒன்று தோன்றி விட்டால், எவ்வளவுதான் அறிவு அதற்கு எதிராக ஆதாரம் காட்டினாலும் மனம் அதை ஏற்பதில்லை. அதே போல் கமலாவின் மனமும் சங்கடப்பட ஆரம்பித்தது. ஒரு வழியாக மாலை வந்ததும், தான் வழக்கமாகச் செல்லும் நந்தவனத்திற்குச் சென்று விம்மி விம்மி அழத்தொடங்கினாள்.

திடீரென்று யாரோ தன் முதுகின் மேல் கை வைப்பது போல் தோன்றவே திடுக்கிட்டுத் திரும்பினாள். மகாதேவன் கனிவுடன் அவளைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

"ஏனம்மா அழுகிறாய்!" என்றார். முதலில் திரிந்து தடங்கினாள் கமலா. கிராமம் முழுவதும் ஒவ்வொருவரும் தங்கள் கஷ்டங்களை இவரிடம் சொல்லி நிவர்த்தியை நாடும் பொழுது நமக்கு மாத்திரம் என்ன வந்து விட்டது என்று தன்னைப் பற்றிய எல்லா விஷயங்களையும் அவரிடம் சொன்னாள். மூர்த்தியைப் பற்றிய விஷயத்தையும் அவன் அவளிடம் வைத்திருக்கும் அன்பைப் பற்றியும் கூடச் சிரமப்பட்டு நாணத்தோடு சொன்னாள்.

"மூர்த்தியை மறந்து வாழ எனக்கு இறைவன்தான் மனோ திடத்தைக் கொடுக்க வேண்டும்!" என்று கூறிக் கமலா கண்ணீர் பெருக்குவதைக் கண்டதும் மகாதேவன் கண்களிலும் நீர் கசிந்தது.

"ஏன்! உன் குலம் தெரியவில்லை என்பதற்காக உன்னை ஏற்றுக் கொள்ள மறுக்கிறானா! அப்படிப்பட்டவனின் அன்பை நீ ஏன் நம்புகிறாய்!" என்று கேட்டார் மகாதேவன்.

"இல்லை, அவர் தயங்கமாட்டார். அவர் அப்படிச் செய்து, இவ்வளவுகாலம் அரும்பாடு பட்டுத் தம்மை வளர்த்த பெற்றோர்களுக்குப் பரிசாகத் துன்பத்தைக் கொடுப்பதை நான் தான் விரும்பவில்லை!" என்றாள் கமலா.

"இப்படிப்பட்ட தியாகத்தைச் செய்ய உனக்கு யார் சக்தியைக் கொடுத்தார்கள்! இறைவன்தானே! அப்படி யிருக்கும் பொழுது ஏன் அந்த இறைவனைச் சந்தேகிக்கிறாய்! மனோ திடம் தானாக ஏற்படும். என் வாழ்க்கையைப் பற்றி உனக்கு ஒன்றும் தெரிந்திருக்க நியாயமில்லை. எப்பேர்ப்பட்ட துயரத்துக்கும் மாற்று அவனிடம் இருக்கிறது. வா, என் பூஜையறைக்குப் போகலாம்."

இதைச்சொல்லி முடித்த மகாதேவனின் முகத்தில் ஒரு அசாதாரணமான பரபரப்பைக் கமலா கவனித்தாள். பிறகு வாய் திறவாமல் அவரைத் தொடர்ந்தாள்.

மகாதேவனது பூஜையறையில் நுழைந்ததும் கமலா அங்கிருந்த ஸ்வாமி படங்களைத்தான் முதலில் பார்த்தாள். பிறகு ஒரு படத்தின் காலடியில் வைக்கப்பட்டிருந்த ஒரு சிறிய ரப்பர் நாய்க்குட்டியின் மேல் அவள் கவனம் விழுந்தது. ஒரு கணம் அதை உற்றுப் பார்த்தாள். பிறகு தன்னை யறியாமலேயே 'டாகு' என்று கத்தி விட்டாள்.

பக்கத்தில் நின்று இதைக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்த மகாதேவன் பேச முடியாமல் சந்தோஷ மிகுதியால் அவளை அப்படியே தழுவிக் கொண்டார். "சந்தேகமில்லாமல் நீ தான் என் பிரேமா. இவ்வளவு நாட்களுக்குப் பிறகு கடவுளுக்கு என் மீது கருணை பிறந்து விட்டது!" என்றார்.

கமலா ஒன்றும் புரியாமல் விழித்தாள். அவள் கலக்கத்தைப் போக்க எண்ணி, மீண்டும் மகாதேவன் தொடர்ந்தார்:

"என் பிரேமாவைத் தவிர வேறு யாரும் அப்பொம்மையின் பெயரைச் சொல்லி யிருக்க முடியாது. அவள் வைத்த செல்லப் பெயர் அது. தினமும் மாலையில் தோட்டத்திற்கு வந்து வாய் ஓயாமல் 'டாகு', 'டாகு' என்று அந்தப் பொம்மையைக் கொஞ்சி விளையாடுவாள். வீடு திரும்பும் நேரம் வந்ததும், 'என்னையும் 'டாகு'வையும் தூக்கிக் கொள்' என்பாள். அவள் என்னை விட்டு மறைந்த பொழுது 'டாகு'வை மாத்திரம் விட்டு விட்டுப் போனாள். ஒரு வேளை அவள் நகைக்காக அவளைத் தூக்கிச் சென்றவன், 'டாகு'வை எடுத்து வர அவனுக்கு அவகாசம் கொடுக்கவில்லை போலும்.

"அவள் போனபிறகு நான் மனம் இடிந்து விட்டேன். இந்த ஏக்கத்தில் உன் தாயாரும் மறையவே, எனக்குப் புத்தியே சுவாதீனம் தவறிவிடும்போல் ஆகி விட்டது. நிம்மதிக்காக இறைவனை வேண்டினேன். இறைவன் என் பிரார்த்தனைக்குச் செவிசாய்த்தான்!" என்றார் பரவசத்துடன். தன்மீது தன் தந்தை வைத்திருந்த பாசத்தை எண்ணியபொழுது அவள் உள்ளம் விம்மியது. கண்கள் தானாகக் கலங்கின.

"அப்பா, உங்களிடம், நிறையப் பணம் இருக்கிறதாப்பா!" என்றாள்.

"அது நீ வாங்க ஆசைப்படும் பொருளைப் பொறுத்திருக்கிறது. ஏதாவது சந்திரலோகம், காஷ்மீர் தேசம் என்று வாங்க எண்ணினால் நிறைய வாங்க முடியாது" என்றார்.

"அதற்கில்லை, மூர்த்திக்கு ஒரு தந்தி கொடுக்க வேண்டும். அவ்வளவுதான்."

"சரிதான், அதற்குள் அப்பாவை அலுத்து விட்டதா உனக்கு! மூர்த்தியிடம் போவதற்கு அவ்வளவு அவசரமா!" என்றார் பொய்க் கோபத்துடன்.

"நீங்கள் நினைப்பதுபோல் இல்லை. ஒரு சமயம் மூர்த்தி என்னிடம் என் அப்பாவின் பெயரைக் கேட்டார். அதைச் சொல்ல முடியாமல் அப்பொழுது தவித்தேன். இப்பொழுது தந்தியின் மூலம் தெரிவித்து விடலாம் என்று எண்ணினேன்" என்றாள்.

இதைக்கேட்ட மகாதேவனின் மனம் பூரித்தது. 'டக்' என்ற ஓசை கேட்டு இருவரும் திரும்பினர். 'டாகு'தான் ஸ்வாமியின் காலடியிலிருந்து கீழே விழுந்திருந்தது.

"ஏது உங்கள் மகிழ்ச்சியில் என்னைத் திரும்பிக்கூடப் பார்க்க மாட்டீர்கள் போலிருக்கிறதே!" என்று கேட்கும் பாவனையிலிருந்தது அந்தப் படத்தில் இறைவனின் திருமுகம்.

# கரூர் கண்ணாயிரம்

லோமாஸ்

சில்லுப் பட்டியில் கான்ஸ்டபிள் வேலை பார்த்து வந்த கரூர் கண்ணாயிரம் திடீரென்று ஹெட்கான்ஸ்டபிள் ஆகிவிட்டது சிலருக்கு அதிசயமாய்த்தான் இருந்தது. போலீஸ் இலாக்காவிலேயே அந்தச் செய்தி பரபரப்பை உண்டு பண்ணி விட்டது.

கடமை, கடமை, கடமை! இதுதான் கண்ணாயிரத்தின் ஜபம். கடமைக்காக அவன் எதையும் செய்யத் தயாராயிருந்தான். நீதி என்றால் நீதி தான்! நியாயம் என்றால் நியாயம்தான். அதையறிந்து தான் அவன் விஷயத்தில் யாருமே கரூராயிருந்து வந்தார்கள். அவனையும் 'கரூர் கண்ணாயிரம்' என்று அழைத்தார்கள்.



கரூர் கண்ணாயிரத்தின் கண்டிப்பு எப்படிப்பட்டது என்பதற்கு அவன் உண்மை வாழ்க்கையிலிருந்தே உதாரணம் எடுத்துக் காட்ட முடியும்.

ஒரு சமயம் கண்ணாயிரம் ஒரு திருடனைக் கையும் களவுமாகப் பிடித்து விட்டான். ஸ்டேஷனுக்கு அந்தத் திருடனைக் கொண்டு போகும் போது அவன் கண்ணீர் விட்டுக் கதறி, "எசமான், இனிமேல் எங்கேயும் திருடறதில்லே! என்னை ஜெயிலுக்குள்ளே போடறத்தைப் பத்தி எனக்குக் கவலையில்லே. ஆனால் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போறத்துக்கு முன்னாலே, வீட்டுக்குப் போய் என் மனைவியையும் குழந்தைகளையும் பார்த்து விட்டு வந்துடறேன்!" என்று கூறினான்.

இதைக் கேட்ட கண்ணாயிரத்தின் கண்களிலும் நீர் கசிந்தது. ஆனால் கடமை உணர்ச்சி அடுத்த கணமே அந்தக் கண்ணீரைத் தடுத்து நிறுத்திவிட்டது.

"நீ சொல்லுகிறபடி நான் செய்வதற்கில்லை. திருடனைப் பிடிக்கிறதுதான் என் கடமையே தவிர, அவனை விட்டுவிடுவதல்ல. ஆகையினால் நான் ஒன்று சொல்கிறேன். உன்னை உன் வீட்டுக்கு அனுப்பி வைத்தால் நான் என் கடமையில் தவறினவன் ஆவேன். அதற்குப் பதிலாக நான் உன் வீட்டுக்குப் போய்ச் செய்தியை உன் மனைவிக்குத் தெரிவித்துவிட்டு வருகிறேன். நீ இந்த இடத்தை விட்டு நகரக் கூடாது. அது நியாயம் அல்ல. எனக்கு நியாயம் என்றால் நியாயம் தான். ஜாக்கிரதை! உன் விலாசம் என்ன?" என்று கேட்ட கண்ணாயிரத்தைத் திருடன் நன்றி பொங்கப் பார்த்தான்; தன்னுடைய விலாசமும் கொடுத்தான்.

திருடன் வீட்டுக்குப்போய் அவன் குடும்பத்தாரிடம் செய்தியைத் தெரிவித்து விட்டு மீண்டும் முன்பு இருந்த இடத்துக்கு வந்தபோது, திருடனும் தன் கடமையைச் செய்து விட்டது தெரியவந்தது. 'காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ள வேண்டும்' என்பதுதானே அவன் கடமை! அப்படியிருக்கும்போது கான்ஸ்டபிள் கண்ணாயிரம் திரும்பிவரும் வரையில் அங்கேயே காத்துக் கொண்டிருப்பதற்கு அவன் என்ன முழு மூட்டாளா? ஆனால் அது பற்றிக் கண்ணாயிரம் வருந்தவில்லை. போலீஸ் இலாக்காவிலும் அது பற்றி அவனை வருந்தும்படி விடவில்லை. உடனே அவனைக் கல்லுப்பட்டி கிராமத்துக்கு மாற்றி விட்டார்கள்.



கண்ணாயிரத்தின் வாழ்க்கையில் நடந்த இன்னொரு சம்பவமும் அவனது கரூரையும் கண்டிப்பையும் அழகாக எடுத்துக் காட்டுவதாகும்.

கண்ணாயிரம் முன்பு கான்ஸ்டபிள் வேலை பார்த்து வந்த ஊரில் ஒருவர் வீட்டில் ஒரு திருட்டுப் போய்விட்டது. திருட்டுப் போன பொருள் ஒரு விலையுயர்ந்த மோதிரம். அந்த மோதிரத்தை இழந்தவர் போலீஸ் ஸ்டேஷனில் 'ரிப்போர்ட்' செய்தார். உடனே போலீஸ் இலாக்கா ஜரூராக வேலை செய்ய ஆரம்பித்தது. கண்ணாயிரம் அந்தத் திருட்டைக் கண்டு

பிடிப்பதிலேயே கண்ணும் கருத்துமா யிருந்தான்.

ஒரு வாரத்துக்குப் பிறகு கண்ணாயிரம் ஒருவனைக் கைப் பிடியாகப் பிடித்துக்கொண்டு ஸ்டேஷனுக்குள் புகுந்தான். அவன் உள்ளே நுழைவதற்கும் ஸப் இன்ஸ்பெக்டர் அவனை அழைப்பதற்கும் சரியாயிருந்தது. ஒரு 'ஸல்யூட்'டுடன் இன்ஸ்பெக்டர் எதிரே போய் நின்றான்.



"என்னப்பா அறுபத்திரண்டு! அந்த மோதிரம் திருட்டுப் போயிற்றே...!" என்று இன்ஸ்பெக்டர் மேலே சொல்லுவதற்குள் அறுபத்திரண்டாம் நம்பர்க் கான்ஸ்டபிள் கண்ணாயிரம் இடைமறித்தான்.

"ஸார், ஒரு வாரமாகக் கஷ்டப்பட்டுப் புலன் விசாரித்ததில் அந்தத் திருட்டு...!"

"அதைப்பற்றித்தான் நான் சொல்ல வந்தேன். அந்த மோதிரம் திருட்டுப் போகவில்லையாம். எங்கேயோ கை மறதியாக வைத்து விட்டார்களாம். அது இப்போது கிடைத்து விட்டதாம். இப்போது தான் அவர் தம்முடைய 'கம்ப்ளெயிண்ட்'டை வாபஸ் வாங்கிக்கொண்டு போனார்!" என்றார் ஸப் இன்ஸ்பெக்டர்.

"......அப்படியா? ஆனால் குற்றவாளி தடயத்துடன் அகப்பட்டு விட்டானே! அவனை இங்கே கையுங் களவுமாகப் பிடித்துக் கொண்டு வந்திருக்கிறேனே!" என்றான் கரூர் கண்ணாயிரம்.

கரூர் கண்ணாயிரத்தை அவனது கண்டிப்புக்காகவும் மநுநீதி காணும் மாண்புக்காகவும் போலீஸ் இலாக்கா பாராட்டா விட்டாலும் நாம் அவனைப் பாராட்டித்தான் ஆகவேண்டும். கல்லுப்பட்டிக்கு வந்த கண்ணாயிரம் 'ஏட்டையா'வானது மிகவும் ஆச்சரியமான விஷயம்தான். ஏற்கெனவே நீங்கள் அவனைப் பற்றிப் படித்த சம்பவங்களை விட இந்தச் சம்பவம் மிகவும் சுவாரஸ்யமானது.

கான்ஸ்டபிள் கண்ணாயிரம் கல்லுப்பட்டிக்கு மாற்றப்பட்டதும் இரவில் 'ரோந்து' சுற்றும் வேலை அவனுக்குக் கொடுக்கப்பட்டது.

கண்ணாயிரத்துக்கே அந்த வேலை அலுத்துப் போய் விட்டது. கண்ணாயிரம் 'ரோந்து' சுற்றுவதற்காகவாவது ஒரு திருடன் அவனிடம் வந்து அகப்பட்டுக் கொண்டிருந்தால் கண்ணாயிரத்துக்கு மிகவும் சந்தோஷமா யிருந்திருக்கும்.

இப்படிக் கண்ணாயிரம் அலுத்துப் போயிருந்த சமயத்தில்தான் கல்லுப்பட்டிவாசிகளில் சிலர், யாரோ ஒரு திருடன் அந்தப் பக்கம் இரவு வேளைகளில் நடமாடுவதாக ரிப்போர்ட் செய்தார்கள்.

கண்ணாயிரத்துக்கு இதைக் கேட்டதும் மிகவும் கவலையாய்ப் போய்விட்டது. 'நாம் எவ்வளவு ஜாக்கிரதையாக இருக்கிறோம். மூலை முடுக்கு விடாமல் சந்து பொந்து தவறாமல் 'உஷார் உஷார்' என்று கத்துகிறோமே! எந்தத் திருடன் இதைக் கேட்ட பின்பு நடமாடுவான்! ஒரு வேளை 'திருடர்கள் உஷார்!' என்று நாம் கத்துவதைத் திருடர்கள் தவறாக எடுத்துக் கொண்டு, தங்களை உஷாராக இருக்கும்படி நாம் கத்துவதாக நினைத்து விட்டார்களோ......! இல்லை, இல்லை. அப்படியிருக்காது. அப்படியிருந்தால் திருடர்கள் வெளியே வராமல் ஜாக்கிரதையாக உள்ளேயே அல்லவோ இருப்பார்கள்! வெளியே நடமாடுவதாக அல்லவா ஊர் ஜனங்கள் நம்மிடம் கூறினார்கள்?' என்று தனக்குத்தானே யோசனை செய்தான். அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. வழக்கம் போல் தன் கடமையைக் கவனிக்கக் கண்ணாயிரம் புறப்பட்டான்.

மெதுவாக நாலாபுறமும் கவனமாகப் பார்த்துக்கொண்டே கண்ணாயிரம் திருடன் மேலேயே கண்ணாக அந்த ரஸ்தாவழியே சென்றான். ஒன்றும் தெரியவில்லை. யாரும் தென்படவில்லை.

கடைசியில் கண்ணாயிரம் அந்தப் பூவரச மரத்தின் அடியில் நின்று யோசனை செய்ய



ஆரம்பித்ததும் 'டக்' கென்று அவனுக்கு அந்தத் திருடன் யார் என்பது புலனாயிற்று. அந்த மாபெரும் உண்மையைக் கண்டுபிடித்ததில் அவனுக்கு உண்டான மகிழ்ச்சிக்கு எல்லையேயில்லை.

ஆமாம். அந்தப் பாதி ராத்திரியில், பயங்கர இருட்டு வேளையில், கண்ணாயிரத்தைத் தவிர வேறு யார் அங்கே நடமாட முடியும்? இந்தப் பேருண்மை புலனாகவே கண்ணாயிரம்தான் சந்தேகிக்கப்பட்ட ஆசாமி என்பது தெளிவாகப் புலனாயிற்று. உடனே கண்ணாயிரம் தன் இடது கையை வலது கையால் 'டக்' கென்று பிடித்துக்கொண்டான்! திருடன் திமிறி ஓடிவிடக் கூடாதல்லவா?




கண்ணாயிரத்தைப் பற்றிய விஷயம் ஏற்கெனவே நமக்குத் தெரிந்ததுதான். நியாயம், கடமை என்று ஏற்பட்டுவிட்டால் அவனுக்குத் தான் வேறு, பிறர் வேறு என்பது கிடையாது. ஜனங்கள் சொன்ன அந்தத் திருடன் தானேதான் என்று தெரிந்த பிறகு கண்ணாயிரம் தன் கடமையைச் செய்ய வேண்டியதுதானே!

உடனே திருடனை மடக்கிக் கொண்டு கேள்வி கேட்க ஆரம்பித்தான். அதாவது தன்னையே கேள்விகள் கேட்டுக் கொண்டான்!

"நீ யாரடா? இங்கே ஏன் பதுங்கி நிற்கிறாய்?"

இந்தக் கேள்விக்குக் கண்ணாயிரத்தினால் பதில் சொல்ல முடியவில்லை.

உடனே கண்ணாயிரத்துக்குப் பதில் சொல்லத் தோன்றாவிட்டாலும் சில விநாடிகளில் சமாளித்துக் கொண்டு "இது தானே என்னுடைய தொழில்? என் வயிற்றுப் பிழைப்புக்காக நிற்கிறேன்!" என்று பதில் சொன்னான்.

இந்தப் பதில் கண்ணாயிரத்துக்குத் திருப்திகரமாகப் படவில்லை. ஆகவே, "கேட்டதற்குப் பதில் சொல்லாமல் என்னென்னவோ பேசுகிறாயே! ஏன் ஐயா இங்கே நிற்கிறாய்? இங்கே என்ன வேலை?" என்று மீண்டும் கேட்டான்.

வெகுநேரம் யோசனை செய்தும் கண்ணாயிரத்துக்கு இந்தக் கேள்விக்கு நம்பத்தக்க பதிலாகக் கொடுக்கத் தோன்றவில்லை. ஏனென்றால் ரோந்து சுற்ற வந்தவன் பதுங்கி நின்றது பிசகுதானே? ஆகையினால் பதில் சொல்ல முடியாமல் திருதிருவென்று விழித்துக் கொண்டு நின்றான்.

உடனே, திருடனைச் சோதனை செய்கிற மாதிரியே தன் சட்டைப்பையில் கை விட்டுச் சோதனை போட்டான். ஒரு குண்டூசியும் ஒரு வத்திப் பெட்டியும் அகப்பட்டன.

உடனே திருடன் சொல்ல வேண்டிய பதிலைத் தானே சொல்லிக் கொண்டான்:

"ஸார், பீடி பிடிப்பதற்காக வத்திப் பெட்டி வைத்துக் கொண்டிருக்கிறேன். குண்டூசி பல் குத்துவதற்கு!"

"இல்லை, இல்லை. தற்கொலை செய்து கொள்ளும் நோக்கத்தோடுதான் இந்தக் குண்டூசியை நீ வைத்துக் கொண்டிருக்கிறாய் என்கிறேன் நான். வத்திப்பெட்டி மிகவும் அபாயகரமான வஸ்து! வா, ஸ்டேஷனுக்கு!" என்று சொல்லித் தன் கையைப் பிடித்துத் தன்னைத் தானே அழைத்துக் கொண்டு போனான்.




அப்போது பாதி ராத்திரி. ஒரு மணி. இன்ஸ்பெக்டர் வீட்டில் தூங்கிக் கொண்டிருந்தார். கண்ணாயிரம் 'லாக்கப்' அறையைத் திறந்து உள்ளே புகுந்தான். மறு நிமிஷம் கதவைச் சாத்தித் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டான். திருடனைப் பிடித்து ஸ்டேஷன் 'லாக்கப்'பில்

அடைத்து விட்டோம் என்ற மன திம்மதி அவனுக்கு உண்டாயிற்று. வெளியே பூட்டவில்லையே என்ற கவலைக்கும் இடமில்லை. கரூர் கண்ணாயிரம் இருக்கும் போது அந்தக் கவலை என்னத்துக்கு?

கொஞ்ச நேரம்தான் கண்ணாயிரம் அந்த இருட்டு உள்ளே அடைபட்டுக் கிடந்தான். 'ரோந்து' சுற்ற வேண்டிய கண்ணாயிரம் இங்கே அடைபட்டுக் கிடந்தால் அது கடமையில் தவறியதாகாதா? கான்ஸ்டபிள் தன்னுடைய கடமையில் தவறினால் அது எவ்வளவு பெரிய தவறு என்று கரூர் கண்ணாயிரத்துக்கு நன்றாய்த் தெரியும். உடனே புறப்பட்டுத் தான் 'ரோந்து' சுற்றவேண்டிய இடத்துக்குப் போய்ச் சேர்ந்தான். அவன் கடமையுணர்ச்சி அவனை அப்படிச் செய்யத் தூண்டி விட்டது.

பொழுது புலரும் தருணம் கண்ணாயிரத்தின் 'டூட்டி' முடிந்தது. திருடனைக் கண்டு பிடித்தால் அவனைப் பிடித்துப் போலீஸில் ஒப்புவிக்க வேண்டிய கடமை அவன் மனதை உறுத்தியது. உடனே போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்றான்.

இன்ஸ்பெக்டர் மேஜைக்கு அருகே போனான். அப்பொழுதுதான் அவர் ஸ்டேஷனுக்கு வந்திருந்தார். அவருக்கு 'ஸல்யூட்' அடித்துவிட்டு, நேற்று இரவு தான் திருடனைப் பிடித்து ஸ்டேஷன் அறையில் அடைத்திருப்பதைச் சொன்னான். அவரை அழைத்துக் கொண்டு அந்த அறைக்கு அருகே போனான்.

என்ன ஆச்சரியம்! அங்கே கைதியைக் காணோமே! அவன் எப்படித் தப்பினான்? எங்கே போனான்? அந்தத் திருடனின் அங்கம் புள்ளி அடையாளங்களெல்லாம் கண்ணாயிரத்துக்கு நன்றாய்த் தெரியும் அல்லவா? உடனே துப்பறிந்து அது யார் என்று கண்டுபிடிக்கக் கண்ணாயிரத்துக்கு அதிக நேரம் பிடிக்கவில்லை! அடுத்த வினாடி, பளிச்சென்று கண்ணாயிரம் அந்த அறையின் கதவைத் திறந்து உள்ளே புகுந்து கதவைச் சாத்தித் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டான்.

இன்ஸ்பெக்டரின் முகத்தில் புன்னகை மலர்ந்தது. உடனே அவர் முகம் கடு கடுப்பாக மாறியது. மீண்டும் அந்த முகத்தில் புன்னகை பூத்தது.

இந்த அற்புத மாறுதல்கள் இன்ஸ்பெக்டரின் முகத்தில் ஏற்பட்டதன் காரணத்தை விளக்க வேண்டியது அவசியம் என நினைக்கிறேன்.

முதலில் இன்ஸ்பெக்டர் புன்னகை செய்தது, 'ஆகா, இந்தப் பலநாள் திருடனைக் கண்டு பிடித்த பெருமை நமது போலீஸ் இலாக்காவுக்கு அல்லவா?' என்ற எண்ணம் காரணமாகத்தான்.

உடனே அவர் முகம் கடு கடுப்பாக மாறியதன் காரணம், 'திருடனைப் பிடித்து என்ன பிரயோஜனம்! அவனைத் தப்ப விட்டு விட்டதினிருந்து நம் இலாக்கா ஆட்கள் பிரயோஜனம் இல்லை என்பது தெளிவாகிவிட்டதே!' என்பதுதான்.

மறுபடியும் அவர் முகத்தில் புன்னகை உண்டாயிற்று. 'அந்தத் திருடன் எங்கே தான் போகட்டுமே! நம் போலீஸ் புலிகள் துப்பறிவதில் நிபுணர்களல்லவா? மறு நிமிஷம் கண்டு பிடித்துக் கொடுத்து விடமாட்டார்களா? இதோ இருக்கிறதே அதற்குக் கண்கூடான அத்தாட்சி!' என்னும் எண்ணத்தினால் ஏற்பட்டது அது.

கடைசியில் அவர் கரூர் கண்ணாயிரத்தைக் கூப்பிட்டார்.

"கண்ணாயிரம், கதவைத்திற, வெளியே வா!" என்று இன்ஸ்பெக்டர் சொன்னதும் 'டக்' கென்று தாழ்ப்பாளைத் திறந்து கொண்டு கண்ணாயிரம் வெளியே வந்து, இன்ஸ்பெக்டருக்கு ஒரு 'ஸல்யூட்' அடித்தான்.

"கண்ணாயிரம், உன் கண்டிப்புக்கும் கறுருக்கும் வெகு நாட்களாகவே உனக்குப் பிரமோஷன் வாங்கித்தர வேண்டும் என்ற எண்ணம் உண்டு. அது எவ்வளவு அவசியமானது, நியாயமானது என்பதை மிகவும் கரூராக ருசுப்பித்து விட்டாய். கடமையில் தவறாமலிருந்து காரியத்தையும் முடித்திருக்கிறாய்! சபாஷ்! நீ பலே கெட்டிக்காரன்! நீ நாளை முதல் ஹெட் கான்ஸ்டபிள்!" என்று இன்ஸ்பெக்டர் உற்சாகமாகச் சொன்னார்.

அப்போது கரூர் கண்ணாயிரத்தின் முகம் பிரகாசமடைந்தது. அவன் கை தானாகவே ஒரு 'ஸல்யூட்' அடித்தது.

## இல்லாத காரணம்!

போர்ட்டர் :—ஐயா, அந்த மூட்டை முடிச்சுகளை என்னிடம் இப்படிக் கொடுங்க! இரண்டணாக் காசு என்னிடம் இருந்தால் நான் உங்களிடம் இப்படிக் கெஞ்சுவேனா?

அவர் :—அது சரிதான், அப்பா! அந்த இரண்டணாக் காசு என்னிடம் இருந்தால் நான் இந்த மூட்டையைச் சுமந்து செல்வேனா?



# வராத மாப்பிள்ளை

நவீனன்

"ஜம்முவிலிருந்து கடிதம்........." என்று அப்பா சொல்லி முடிப்பதற்குள் ஒரே துள்ளலில் அந்தக் கடிதத்தை உரிமையுடன் பிடுங்கிக் கொண்டு உள்ளே ஓடினாள் உமா.

அவளுடைய முகத்திலே குப்பென்று சூழ்ந்து கொண்ட உற்சாகம், அது அவளுடைய கணவன் போட்ட கடிதம் என்பதை எடுத்துக் காட்டியது. உமா பர பரவென்று கடிதத்தைப் பிரித்துப் படித்து விட்டு, "அப்பா! அவர் அடுத்த வாரம் வருகிறாராம்" என்று கூவினாள்.

"அப்பாடா! ஒரு வருஷத்திற்குப் பிறகு இப்பவாவது புண்ணியவான்கள் அவருக்கு லீவு கொடுத்தார்களே!" என்று உமாவின் தந்தை மூக்குக் கண்ணாடியை நெற்றிக்கு மேல் தூக்கிவிட்டுக் கொண்டு திருப்திப்பட்டார்.

உமா கடிதத்தை மார்போடணைத்துக் கொண்டு குதூகலக் குதியுடன் பின்கட்டுக்கு ஓடினாள். இடைக் கட்டு வாசற்படியைத் தாண்டும் போதே, "மாமி!" என்று கூப்பிட்டுக்கொண்டு ஓடினாள்.

அந்தக் குடித்தனக்கார மாமி, கும்மிட்டி அடுப்பில் எதையோ வாட்டிக் கொண்டே, "வாடியம்மா, வா! கடுதாசி யார் போட்டிருக்கிறார்கள்? உன் கணவர்தானே? வினைத்தேன்!" என்று கூறி உமாவை மேலும் மகிழவைத்தாள். சந்தர்ப்ப மறிந்து பேசும் கலை அந்தப் 'பழங் காலத்து மண்'ணுக்கு 'அத்துப்படி' ஆகி இருந்தது.

"உங்களுக்கு எப்படி மாமி, தெரியும்?.......அவர் அடுத்த வாரம் பறந்து வருகிறாராம். எனக்குக் காஷ்மீரில் இருந்து சில அபூர்வமான சாமான்கள் எல்லாம் பரிசாகக் கொண்டு வருகிறாராம். அந்த விஷயத்தை வளைத்து வளைத்து எழெட்டு இடத்தில் எழுதி இருக்கிறார்!" என்று உமா எப்படித்தான் சொன்னாளோ? உற்சாகம் அவளைப் பேசவிடவில்லை!

"ஏன் மாமி, பட்டுவை எங்கே காணோம்?" என்று கேட்டபோது, "'அது' எங்கேயாவது மாடியிலே 'உம்' மென்று முகத்தை வைத்துக் கொண்டு நிற்கும்! இப்படி ஒரு பெண் அக்கிரியாக எனக்குப் பிறக்கணுமா? நேற்று அவள் புருஷனிடமிருந்து கண்டிப்பும் கறுருமாகக் கடிதம் வந்தது. அதைப் படித்துப் பார்த்துவிட்டு அழுதுகொண்டு எங்கேயாவது நிற்கும்! 'அது' இடக்கிறது உமா! உன் அகமுடையான் அடுத்த வாரம் வருகிறாராக்கும்......அப்படியானால் நான் காலை முதல் உன்னுடைய 'மாமி!' கூப்பாட்டை எதிர்பார்க்க முடியாது என்று சொல்லு!" என்று அந்தப் பின் கட்டுக் குடித்தன மாமி, தன் துயரத்தை எல்லாம் சாமர்த்தியமாக மறைத்துக் கொண்டு பேசினாள்.

ஆனால் உமாவின் உற்சாகம் குறைய வாரம்பித்தது. 'பட்டுவின் புருஷன் கண்டிப்பும் கறுருமாக என்னதான் எழுதி இருப்பான்?' என்று அவள் எண்ணமிட லானாள். மாமியார், மாமனாரின் பிடுங்கலுக்கு ஆளாகி அவள் இந்தத் தடவை பொறுக்க முடியாமல் பிறந்த வீட்டுக்கு 'ஓடி வந்துவிட்டது' சமாசாரமாக உமாவுக்குத் தெரியும். அந்த ஏழைப் பெண்ணை அவர்கள் ஒவ்வொரு பண்டிகைக்கும் 'சீர்' என்று சொல்லிப் பணத்திற்குப் பிடுங்கி எடுப்பதைப் பற்றியும் அரைகுறையாகப் பட்டு அந்தரங்கமாகச் சொல்ல உமா கேட்டறிந்து கொண்டிருக்கிறாள்.

"பாவம்! பட்டுவும் என்னைப்போலத் தானே? ஆனால் ஏழை வீட்டு வித்து.

என்னத்திற்கு அவளுடைய புக்ககத்தில் குடும்ப நிலை நன்கு தெரிந்திருந்தும் இப்படி அவளை வாட்டி வதைக்கிறார்களோ?" என்று பலமுறை அனுதாபப் பட்டிருக்கிறாள். அவளுடைய தலைதீபாவளிக்கு அப்பாவுக்குத் தெரியாமல் தன்னிடமிருந்த ரூபாயில் நூறு இரகசியமாகத் தந்துகூடப் பரோபகாரம் செய்திருக்கிறாள், உமா. பட்டுவின் அழகு, இனிய பாட்டு, கலகலவென்று மனம் விட்டுப் பேசும் சுபாவம் எல்லாமாகச் சேர்ந்து பல வருஷங்களாக உமாவை நட்பினால் பிணைத்து வைத்திருந்தன.

உமாவின் தயவினால்தான் பட்டுவின் குடும்பத்திற்கு அந்த வீட்டுப் பின் கட்டில் குடி இருக்க இடம் கிடைத்தது.

"பாவம், ஏழைகள்! இருந்துவிட்டுப் போகட்டும். எனக்கும் இத்தனை பெரிய வீட்டில் பொழுது போகமாட்டேன்கிறது. தாங்கள் கோர்ட்டுக்குப் போன பிறகு நான் மட்டும் கொட்டு கொட்டென்று உட்கார்ந்திருக்க வேண்டியிருக்கிறது" என்று தாயற்ற உமா, மாஜிஸ்டிரேட்டான தகப்பனாரிடம் 'கருணை மனு'ப் போட்டுஅவர்களைக் குடிவைத்துவிட்டாள்.

சில மாதங்களில் பட்டுவின் தாயாரால் வாடகை தர இயலாது போனால் "அந்தப் பத்து ரூபாய் வந்து நமக்கு என்ன ஆக வேண்டும் அப்பா! அதற்குப் பதிலாக எனக்கு அவர்களிடமிருந்து எத்தனையோ பாட்டுக்கள் பாட வந்திருக்கின்றன!" என்று சந்தர்ப்பம் பார்த்துத் தந்தையிடம் கூறிச் சமாளித்துவிடுவாள் உமா. இப்படி எல்லாம் தங்களுக்கு மகத்தான உபகாரியாக இருக்கும் உமாவைப் பட்டுவும், அவள் தாயாரும் மனமார வாழ்த்தி வாயாரக் கொண்டாடினார்கள்.



உமாவுக்குக் கல்யாணம் நடந்தபோது அவர்களுடைய நட்பு மேலும் இறுகியது. தாயும், மகளுமாக அந்தக் கல்யாண நாட்களில் தீவிரப் பங்கெடுத்துக் கொண்டு ஜமாய்த்து விட்டார்கள். உக்கிராண உள்ளில் அம்மாவின் கெடுபிடியும், நலுங்கு வைபவங்களில் பெண்ணின் ஏசல் பாட்டுக்களும் பிரமாதப்பட்டன. அது முதல் பத்து ரூபாய் வாடகையை ஐந்து ரூபாயாக மாஜிஸ்டிரேட்டே குறைத்து விட்டார்!

*

திடீரென்று ஒரு நாள் பட்டு தன் புக்ககத்துக்குப் புறப்படும்படி நேர்ந்தது. உமாவுக்கு அவளைப் பிரியவே மனமில்லை. "பட்டு! நீகூட என்னைப் பிரிந்து செல்லும்படி நேர்ந்துவிட்டதே! எனக்கு எப்படியடி பொழுது போகும்? உணர்ச்சி ததும்பப் பத்திரிகைகளில் வரும் சிறு கதைகளை எல்லாம் இனி யாரடி வாசித்துக் காட்டப் போகிறார்கள்? அவர் என்றைக்கு ஜம்முவிலிருந்து திரும்பி வந்து என்னை அழைத்துக் கொண்டு போகப் போகிறாரோ?" என்று பட்டுவுக்கு முன்னால் விம்மினாள் உமா.

"காஷ்மீரில் சண்டை முடிந்து விட்டது என்று பத்திரிகையில் போட்டிருக்கிறது. அவர் வெகு சீக்கிரம் திரும்பி வந்துவிடுவார். அப்புறம் அவரிடம் சென்று ஆனந்தமாக இரு. நான் அடிக்கடி உனக்குக் கடிதம் எழுதுகிறேன். என் புக்ககத்தில் இருப்பவர்கள் ஒரு தினுசு என்றுதான் உனக்குத் தெரியுமே. எனக்கு மணமாகி ஒரு வருஷத்திற்குப் பிறகு இப்போதுதான் என்னைப் பெரிய மனசு பண்ணிக் கூப்பிட்டிருக்கிறார்கள்! என் கல்யாணத்தின்போதே எவ்வளவோ சண்டைகள்!" என்று கூறி பட்டு தன் ஆப்தத் தோழியைத் தேற்றினாள்.

ஆனால் பட்டு புக்ககம் போன இரண்டு மாதங்களுக்குப் பிறகு திருப்பி அனுப்பப்பட்டாள். ஏற்கனவே செய்து போடுவதாகச் சொன்ன வைரத்தோடுடன் அவள் 'டால்' அடித்துக்கொண்டு வரவில்லை என்பது குற்றச் சாட்டு. தன் தாய், தந்தையருக்குப் பயந்த பிள்ளை 'கம்'மென்று இருந்துவிட்டான். இரண்டாம் புடவையைக்கூட எடுத்துக்கொள்ள அனுமதிக்கப்படாமல் பட்டு தாய் வீட்டுக்குப் பலாத்காரமாக ரயிலேற்றப்பட்டாள்.

"வைரத்தோடு போடுவதாகச் சொன்னது உண்மைதான்! ஆனால் அதற்குள்

'அவர்' இறந்து குடும்பம் அலங்கோலமாகி விட்டது. நான் என்ன செய்வேன்?" என்று பட்டுவின் தாய் சென்று கதறிப் பார்த்தாள். அவர்கள் மனம் இரங்கவில்லை. எங்கேயாவது பிள்ளையாண்டானுக்கு மனம் இரங்கி விடுமோ என்று நினைத்து மாமியார் வந்திருந்த நேரத்தில் அவளை ஒளித்துக்கூட வைக்க அவர்கள் அஞ்சவில்லை.

பட்டு, திரும்பி வந்ததில் உமாவுக்கு எவ்வளவோ சந்தோஷம். ஆனால் எதற்காக அவள் வந்திருக்கிறாள் என்று உமா அறியாள். "பட்டு! எத்தனை நாட்களுக்கு இருப்பாய்? ஒரு மாதமாவது இருந்து விட்டுப் போவேன்!" என்று பட்டுவின் உள்ளமறியாது, வந்த அன்று அவளை உலுக்கி எடுத்துவிட்டாள் உமா.

ஒருநாள் உமாவும் பட்டுவும் தனித்து இருந்தபோது பட்டு தன் புக்ககத்துப் 'படுத்தல் புராணங்களை எல்லாம்' எடுத்துச் சொன்னாள்.

"உமா! நாங்கள் வைரத்தோடுக்கு எங்கே போவோம்? அன்றாடம் வயிற்றைக் கழுவுவதே எங்கம்மாவுக்குச் சிரமமாக இருக்கும்போது.........உமா! எங்கம்மா உன்னிடம் எதுவும் சொல்லாதே. சொன்னால் சஞ்சலப்படுவாய் என்று கூறி இருக்கிறாள். மனம் கேட்கவில்லை, சொன்னேன். எங்கம்மாவிடம் இதுபற்றி வாய் தவறிக் கேட்டுவிடாதே!" என்று கண்ணீரும் கம்பலையுமாகச் சொல்லி விட்டுச் சட்டென்று புடவைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக்கொண்டு தன் 'போர்ஷ'னுக்கு ஓடினாள் பட்டு.

அன்று முழுவதும் உமாவுக்கு என்னமோ போல இருந்தது. எவ்வளவு வேண்டுமானாலும் சீர்செய்யச் சக்தியுள்ள தன் தகப்பனாரிடம் ஒரு பைசாக்கூடச் சீராகப் பெறத் தன் கணவர் விரும்பவில்லை. 'சீரா! சே! சே! மாமனாரை ஒரு கறவைப் பசுவாகக் கருத நான் அவ்வளவு முட்டாளில்லை!' என்று அவர் கம்பீரமாகக் கூறிவிட்டுக் 'காப்டன்' வேலையை ஒப்புக்கொண்டு ஜம்முவுக்குப் பறந்து சென்றது அவளுக்கு முட்டி மோதிக்கொண்டு நினைவுக்கு வந்தது. அதே சமயம் தன் ஆப்தத் தோழியின் வாழ் நாட்களுக்கு இடையூறாக வைரத்தோடு நின்றுகொண்டு அவளை வாழாவெட்டியாக்கப் பாடு படுவதைக் கண்டு உமாவுக்கு உள்ளம் கொதித்தது.

'எனக்கு என் கணவரிடமிருந்து சந்தோஷத்துடன் ஒரு கடிதம்! பட்டுவுக்கு அவள் கணவரிடமிருந்து, 'வைரத்தோடு இல்லாமல் இங்கே வருவதைப் பற்றிக் கனவிலும் கருதாதே!' என்று எச்சரிக்கப்பட்ட ஒரு கடிதம்! எங்களுக்குள் எவ்வளவு வித்தியாசம்?' என்று ரொம்பவும் மனம் புழுங்கினாள் உமா.

அன்று உமாவின் கணவர் வரவேண்டிய நாள். உமாவின் தகப்பனாருக்கு அவசரமாக அந்த நேரத்தில் வேறு வேலை இருந்ததால் டிரைவரைக் காருடன் ஸ்டேஷனுக்கு அனுப்பினார்.

"ஏன் டிரைவர்! உனக்கு மாப்பிள்ளையின் அடையாளம் தெரியுமா?" என்று உமா கேட்டாள்.

"என்னங்க அப்படிக் கேக்குறீங்க!" என்று டிரைவர் ஆச்சரியப் பட்டுவிட்டு 'விர்'ரென்று காரைக் கிளப்பிக் கொண்டு போனான். உமா வீட்டில் குறுக்கும் நெடுக்குமாக நடை போட்டாள். கெடியாரத்தை அடிக்கடி நிமிர்ந்து பார்த்தாள். "இந்த போட்மெயில் எப்போதுமே லேட்! இன்று எத்தனை மணிக்கு வருமோ!" என்று ரயில்வே கெயிடைப் புரட்டியபடி அவள் வாய் முணுமுணுத்தது.

ஸ்டேஷனுக்குப் போன கார் திரும்பி வந்தபோது, அதில் ஆச்சரியம் காத்திருந்தது. அதிலிருந்து உமாவின் கணவன் இறங்குவதற்குப் பதிலாகப் பட்டுவின் புருஷன் பிரணதார்த்தி கட்டுக் குடுமியுடன் கம்பீரமாகக் கீழே இறங்கினான்.

வாசற்பக்கம் நின்று கொண்டிருந்த உமாவின் தந்தையை அவன் பார்த்துவிட்டு, "மன்னிக்கணும்! தங்களுடைய மாப்பிள்ளைக்காகக் கார் ஸ்டேஷனுக்கு வந்தது என்று பின்னால் தான் தெரிந்து கொண்டேன். என்னைத் தவிர ஸ்டேஷனில் யாரும் இறங்கவில்லை. டிரைவர் தவறுதலாக என்னைப் புரிந்து கொண்டு ஏற்றிக் கொண்டு வந்து விட்டான்!" என்று அசட்டுச் சிரிப்புச் சிரித்துக் கொண்டே பின்கட்டுப் பக்கம் நுழைய ஆரம்பித்தான்.

மாஜிஸ்டிரேட் அவனைத் தண்டிப்பது போலத் தன் விழிகளால் பார்த்தாலும் மேலுக்கு, "பரவாயில்லை! நீங்களும் இந்த வீட்டுக்கு மாப்பிள்ளை தானே?" என்று கூறினார்.

எதிர்பாராத விதமாகப் பட்டுவின் கணவன் வந்ததைப் பார்த்த பட்டுவின் அம்மாவுக்கு ஒன்றுமே புரியவில்லை. உள்ளே ஓடினாள். கிழிசல் ஜாக்கெட்டுக்குச் சோப்புப் போட்டுக் கொண்டிருந்த தன் பெண்ணைக் கிளப்பிவிட்டு, "பட்டு! பட்டு! உள்ளே போ. உன் கணவர்..." என்று கூறித் திக்கு முக்காடினாள். அந்தப் பெண் "நிஜந்தானா!" என்று விழிகளால் கேட்டுவிட்டுச் சமையற்கட்டுக்கு விழுந்தடித்துக்கொண்டு ஓடினாள்!

பின் கட்டிலிருந்து சில நிமிஷங்களுக்கெல்லாம் பட்டு "உமா! உமா!" என்று கூப்பிட்டுக் கொண்டு வந்தாள்.

ஓடி வந்த பட்டு உமாவின் கைகளைப் பிடித்துப் பரபரவென்று இழுத்துக் கொண்டு மேல் மாடிக்கு அழைத்துச் சென்றாள். "உமா! உன்னை என்னமோ என்று நினைத்தேன். கண்கண்ட தெய்வம் நீ! என்னை வாழ்விக்க வந்தவள்! இப்படி எல்லாம் என்னிடம் அக்கறை செலுத்தி எனக்குக் கூடத் தெரியாமல் உன்னுடைய வைரத்தோடை நான் அனுப்பியது போல அவருக்கு அனுப்பி, அவர் மனம் உருகும்படி என் பெயரால் ஒரு கடிதமும் எழுதி அனுப்புவாய் என்று எனக்கு எப்படித் தெரியும்?

"'பட்டு! என்னை மன்னித்துவிடு. உன்னுடைய குடும்ப நிலை தெரியாது இவ்வளவு காலமாகத் துன்புறுத்தி விட்டோம்' என்று அவர் மன்றாடுகிறார். என் கண்களை, என் காதுகளை என்னால் நம்பவே முடியவில்லை! உமா! உமா! இந்த நன்றியை... இந்த மகத்தான உபகாரத்தை......" என்று பட்டு நாக்குழறத் தடுமாறினாள்.

தன் ஆசைக் கணவர் 'ஏன் வரவில்லை?' என்ற துக்கத்தைக் கூட வெளிக்காட்டாமல் உமா, "பட்டு! வைரத் தோடு என்னுடைய ஆப்தத் தோழிக்கு அளித்த அன்பளிப்பு. வராதவர் வந்திருக்கிறார். போ, அன்புடன் பேசு!" என்று சொல்லி அனுப்பினாள்.

* * *

உமா படி இறங்கிக் கீழே வந்தபோது அவளுடைய கணவனிடமிருந்து தந்தி ஒன்று வந்திருந்தது.

"மாமி! அவர் நாளைக்குத் தான் வருகிறாராம்..." என்றாள் உமா.

"உமா! உன் தோழி நாளைக்குப் புக்ககம் போகிறாள்!" என்றாள் மாமி. சொன்னாள் மாமி.

"அதற்குக் காரணம் யார் தெரியுமா? உமாதான்!" என்று பட்டு அர்த்த புஷ்டியுடன் அம்மாவைப் பார்த்தாள்.

# அதுவும் அப்படியா?

அன்று ஞாயிற்றுக்கிழமை. மாலை ஐந்து மணி அடித்ததும் வக்கீல் ஜெகந்நாதன் அழகாக ஆடை யணிந்து கொண்டு சங்கீத சபாவுக்குக் கிளம்பினார். அன்று சபாவில் யாரோ புதிய இளம் பாடகர் பாடுவதாகப் போட்டிருந்தது. புதிய பாடகராதலால் சபையில் அவ்வளவு கூட்டமில்லை. வக்கீல் ஜெகந்நாதன் சபையில் நுழையும் போது கச்சேரி ஆரம்பமாகி விட்டது. ஜெகந்நாதன் தமக்குரிய ஆசனத்தில் போய் அமர்ந்தார்.

கச்சேரி நடந்து கொண்டிருந்தது. ஜெகந்நாதனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்தவர் பிரமாதமாகத் தலையை ஆட்டித் தாளம் போட்டுக் கொண்டிருந்தார். ஜெகந்நாதனுக்கோ அந்தப் பாடகரின் பாட்டு அவ்வளவாக ரஸிக்கவில்லை. அவருக்குப் பாதியில் எழுந்து போகவும் சிரமமாயிருந்தது. அவர் சிரமப்பட்டுக்கொண்டு பக்கத்திலிருப்பவர் பக்கம் திரும்பி, "ஏன் ஸார்! இவர் இளம் பாடகரோ? குரல் கர்ண கடூரமாயிருக்கிறதே? இந்தப் பாடகர் யார் ஸார்!" என்று கேட்டார்.



பக்கத்தில் உட்கார்ந்திருந்தவரின் முகம் கருங்கியது. அவர் மென்று விழுங்கிக் கொண்டே, "இந்த இளம் பாடகர் என் தம்பி, ஸார்! இதுதான் அவனது முதல் கச்சேரி. அதனால் தான்......!" என்று இழுத்தார்.

அதைக்கேட்டதும் வக்கீல் ஜெகந்நாதன் திகைத்துப்போய், "ஓஹோ! அப்படியா? மன்னித்து விடுங்கள், ஸார்! பாடகரின் குரல் நன்றாகத்தானிருக்கிறது. ஆனால் அந்த மோசமான சாஹித்தியத்தினால்தான் பாடகருக்குக் குரல் எடுக்கவில்லை. அந்தப் பாழாய்ப்போன சாஹித்தியத்தை இயற்றிய புண்ணியவான் யாரோ தெரியவில்லை?" என்று கூறித் தமது தவறை மழுப்பப் பார்த்தார். ஆனால் அவருக்கு ஒரு தவறுக்குப் பதில் மற்றொரு தவறும் செய்கிறோம் என்பது பிறகுதான் புரிந்தது.

பக்கத்திலிருந்த மனிதர் அசடு வழியும் முகத்துடன், "ஸார்! அந்த சாஹித்தியத்தை இயற்றியதும் நான்தான்!" என்று கூறிவிட்டு அவரைக் கோபக் கனல் தெறிக்க ஒருமுறை விறைக்கப் பார்த்தார்.

அவ்வளவுதான்; ஜெகந்நாதன் அதற்கு மேல் அங்கிருக்கப் பிரியப்படாமல் மெதுவாக அங்கிருந்து நழுவி விட்டார்.

—பி. என். மணி.

## விவாஹம்



சௌ. பத்மினி
ஸ்ரீ ஜி. ராமச்சந்திரன்
*(B. Sc. (Hons.) I. A. A. S.)*

மணமகள், இந்திய சர்க்கார் சென்ட்ரல் ரெவின்யூ இலாகாவைச் சேர்ந்த ரிடையர்ட் சீப் - கெமிஸ்ட் டாக்டர் எஸ். எஸ். ஐயரின் குமாரி. மணமகன், மதராஸ் சர்க்காரைச் சேர்ந்த லோகல் பண்ட் அக்கௌண்ட்ஸ் ரிடையர்ட் இன்ஸ்பெக்டர் ஸ்ரீ எம். ஆர். கோபாலய்யரின் குமாரர். விவாகம் 25 - 3 - 51 அன்று பெங்களூர், வாசவி தர்மசாலாவில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. நகரின் பிரபலஸ்தர்கள் அனைவரும் விஜயம் செய்திருந்தனர். மணமக்களும் அவர்களது பெற்றோர்களும் மணமக்களுக்குப் பரிசுகள் வழங்கியவர்களுக்கும், ஆசி கூறியவர்களுக்கும் தங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறார்கள்.






# டி.எஸ்.ஆர். கோகுல் ஹேர் ஆயில்



## டி.எஸ்.ஆர் & கோ. கும்பகோணம்.

சென்னை நகரத்திற்கு சோல் ஏஜண்டுகள்:

**மெஸர்ஸ். சுராஜ் ஏஜன்ஸீஸ்**
37, ஜானி ஜஹான்கான் ரோடு
ராயப்பேட்டை, மதராஸ்

கோவை, பாலக்காடு அண்டு நீலகிரிக்கு சோல் ஏஜண்டுகள்:

**B. பால பட்டாபி செட்டியார்**
346, வைசியாள் தெரு - கோயமுத்தூர்

ஸ்டாக்கிஸ்டுகள்:

**மெஸர்ஸ். சண்டிகா & கோ.,**
முதல் அக்ரஹாரம் சேலம் டவுன்



# 'கோலினாஸ்' புன்னகையில் உல்லாசம் ஒளிர்கிறது!

நுரை தான் இந்த வித்தியாசத்திற்குக் காரணம்!

அதிக சிக்கனமானது — ப்ரஷ்ஷில் அரை அங்குல அளவே போதுமானது!




இந்தியாவில் தயாரிப்பாளர்கள்:
ஜியாப்ரே மானர்ஸ் & கோ, லிட்.,
பம்பாய் 1.
கிளைகள்: கல்கத்தா-மதராஸ்-டில்லி.

# ஆரோக்கியமான குடும்பமே சந்துஷ்டி நிறைந்த குடும்பம்!



குடும்ப ஆரோக்கியத்தைப் பாதுகாக்க சாதாரண உணவு போதாது என்று டாக்டர்களுக்குத் தெரியும். குறைபாடுகளை நிவர்த்தி செய்து குடும்பத்தில் ஆரோக்கியமும் சந்துஷ்டியும் பெருக ஓவல்டின் அதிகப்படியான போஷாக்கு அளிக்கிறது. இந்த ருசியான உணவு பானத்தில் சேர்க்கையான இயற்கை உணவுகளும் சுத்தமான பசுவின் கெட்டிப்பால் பழுத்த பார்லிமால்ட், சிறந்த கொக்கோ, இயற்கை பாஸ்பேட்டுகள் பி & டி விடமின்களும் இருக்கின்றன. ஓவல்டினில் இருக்கும் போஷாக்கு மற்றும் விடாமின் சத்துக்கள் இன்றியமையாதவை. ஓவல்டினைப் போல் சிறந்தது வேறு கிடையாது. பெரியவர்கள் திடசாலிகளாக இருக்க ஓவல்டின் பருகவேண்டும். இது குழந்தைகளுக்கு வளர்ச்சியைத் தூண்ட உதவுகிறது. இரவில் நித்திரைக்கு முன் சாப்பிட்டால் ஆழ்ந்த சுகமான நித்திரையைத் தருகிறது. போலிகளைத் தள்ளிவிடுங்கள்.

விநியோகஸ்தர்கள் : கிரஹாம்ஸ் டிரேடிங் கம்பெனி (இந்தியா) லி-ட்.




## ஓ வ ல் டி ன்

**குடும்ப ஆரோக்கிய பானம்.**

OV. 326

# உங்கள் காரை ஓட்டுவதற்கு செலவு குறைவாகவே பிடிக்கும்

எப்படியெனில் நீங்கள் டன்லப் போர்ட் மாட்டி ஓட்டவேண்டும். அழகான தோற்றமும் அமைதியான ஓட்டமும் அளிக்கும் இந்த டயர்கள் உங்கள் பணத்திற்கு அதிகப்படியான மைல்கள் பிரயாணத்தைத் தரும். மேலும் இதிலுள்ள தாக்குப்பிடிக்கவல்ல ட்ரெட் மோல்தரானது அதிக பலமான ரஸ்தா பிடிப்பையும், வழுக்கி விழாமல் தடுக்கும் குணத்தையும் அளிக்கவல்லது. டன்லப் போர்ட் தான் வேண்டுமென்று கேளுங்கள்.





# டன்லப்
## போர்ட் டயர்கள்

உழைப்புக்கென்றே தயாரிக்கப்படுகின்றன

DX 371 TM

MORTON



மதுரமான
மிட்டாய்களுக்கு
மார்ட்டன்

**ஸி. & ஈ. மார்ட்டன் (இந்தியா) லிட்.**

*க்ரீம், டாப்பிகள், பழரஸ மிட்டாய்கள், இனிப்பான பார்லி லாக்கிகள், பெப்பர்மின்ட், முதலிய முதல்தர மிட்டாய்களைத் தயாரிப்பவர்கள்.*

M-2.

*தென்னிந்தியாவிற்கு சோல் ஏஜண்டுகள் :*
மெஸர்ஸ். ஸௌத் இந்தியா கார்ப்பொரேஷன் (மதராஸ்) லிமிடெட்
*80, செம்புதாஸ் தெரு, மதராஸ்*

---



முக
வசீகரத்தின்
முதல் தேவை




Distributors:

A. V. R. A. & Co.,
45, Thambu Chetty Street, Madras-1 :: 6, Lohar Chawl, Bombay-2

நம்பிக்கை
ஊட்டுவது
பர்மா-
ஷெல்





கோபு: டேய் கிட்டு! மானேஜர் என்னத்திற்கடா கோபித்துக்கொண்டார்?

கிட்டு: நான் கொடுத்த 'ஸ்டேட்மெண்ட்'டிலே தப்பிருந்ததடா. அதற்குத்தான், என்னைத் தூங்குமூஞ்சி என்றுகூட சொன்னார். தூக்கம் என்னையறியாமலேயே வந்துவிடுகிறது. என்ன செய்கிறது என்றுதான் தெரியவில்லை.

கோபு: அட அப்பாவி! இதுவா பிரமாதம். நீதான் பார்த்துக்கொண்டு வருகிறாயே. சரியாக மூன்று மணிக்கு நான் 'டீ' சாப்பிடுவது வழக்கமாச்சே. அதுதான் என் சோம்பலைப்போக்கி, சுறுசுறுப்புடன் வேலை செய்ய உதவுகிறது. நீயும்தான் நாளையிலிருந்து 'டீ' சாப்பிட்டுப்பாரு. எல்லாம் சரியாகிவிடும்.




'டீ' என்றும் என்ன? அதுதான் சிக்கனமானதும், களைப்படைந்த உடம்புக்கு ஊக்கத்தையும், தளர்ந்த மனதிற்கு உற்சாகத்தையும் மீட்டுக்கொடுக்க ஒப்பற்றதும், சுலபமாக தயாரிக்கக்கூடியதும், எங்கும் கிடைப்பதுமான தேசியபானம். ஒரு கோப்பை 'டீ' சாப்பிட்டுப்பாருங்கள் அப்பொழுதே அதன் குண விசேஷங்களை உணர்வீர்கள்.

CTB 40

'சென்ட்ரல் டீ போர்ட'ரால் வெளியிடப்பட்டது

நீங்கள் உங்கள் பற்களை

இன்று **மக்ளீன்** செய்தீர்களா?



வருஷக் கணக்காக நான் மக்ளீன்ஸ் உபயோகித்து வருகிறேன். என் பற்கள் அழகாகவும் வெண்மையாகவும் இருக்கின்றன. நான் வேறு எந்த டூத் பேஸ்டும் உபயோகிக்கமாட்டேன்.

வாயைச் சுத்திகரித்து
மூச்சின் நாற்றத்தை
போக்குகிறது

உமிழ்நீர
கெடுதலைத் தடுத்து
ஈறுகளைப் பாதுகாக்கிறது.

மேலே உள்ள கறைகளை அகற்றி
பற்களுக்கு
வெண்மை
தருகிறது

இன்றே மக்ளீன்ஸ் வாங்குங்கள் !




Edited, Printed and Published by R. Krishnamurthy at The "Kalki" Press 116 - 119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

REGD. NO. M. 4392




நாளுக்கு நாள் அதிக
தெளிவுள்ள எழிலோங்
கும் சருமத்திற்கு

ரெக்ஸோனா சோப்பை தின
மும் இரண்டு அல்லது மூன்று
தடவைகள் உபயோகித்து
உங்கள் சருமம் அதிக தெளி
வோடும் ஆரோக்கியத்தோ
டும் விளங்குவதைக்
காணுங்கள்.

# ரெக்ஸோனா

கேடில் கலந்த சோப் இது ஒன்றே

RP. 72-172-53 TM